## (55)

| | | | |
|---|---|---|---|
| | சு செ | குரு பு | ல |
| | | | |
| | | | |
| | சனி | | |

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் பூமகனுடன் கூடி பிதுர் ஸ்தானாதிபதி ஏகனாய் ஆறுமிட மேறி, குரு புத னிவர்கள் திருஷ்டியடைந் திருந்தால் ஜாதகனுக்கு முப்பத்து நாளில் தந்தை மரணமாவ னென்பர்.

## (56) (பனிரண்டாமிடம்)

| | | | |
|---|---|---|---|
| | | சு | ல |
| குரு ச | | | |
| | | | |
| சனி | | | |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் தனித்து பாக்கியத்தில் தனசப்தம கர்மாதிபதிகள் கூடி சப்தம கேந்திரம் பெற்ற பிதுர்ஸ்தானாதிபதியால் பார்க்கப்பட்டால், தந்தை காலம் சுக முண்டாம், தந்தை பதினான்கில் மரணமாவ னென்பர்.

## (57)

| | | | |
|---|---|---|---|
| | | சு - சு | ல |
| ச | | | |
| | | | |
| | | | |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம விரயாதிபதியுடன் கூடி, குடும்பாதிபன் நவ திரிகோண மேறி யிருந்தால் தந்தைவர்க்க மிரண்டு, தந்தை தனவானாயும் அம்பாள் பக்தியுள்ளவன். ஓராண்டில் பிதுர்வர்க்கத்தில் ஜலத்தினால் மரணமுண் டென்பர்.

## (58)

| | | | |
|---|---|---|---|
| | | சு | ல |
| | | | |
| | | | |
| | சனி | | குரு |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் தனித்து சப்தம அஷ்டம பாக்கிய கர்மாதிபதிகளின் பார்வை யடைந்திருந்தால், தந்தை ஏகம். மத்திய காலத்தில் பிதா மதிபேதகனாவ னென்பர்.

## (59)

| | | | |
|---|---|---|---|
| | | சூ-பு சு | ல |
| செ | | | |
| | | | |
| | | | |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்கார கன் பிரைமகன் கவியுடன் கூடி, ஒன்பதா மிடமேறிய பூமகன் பார்வை பெற்றிருந் தால், பிதுர் சகோதர மிருவர், தந்தை பனிரண்டிற்குள் மரணமடைவரென்பர்.

## (60)

| | | | |
|---|---|---|---|
| | | சூ-பு | ல |
| ச கே | | | |
| | | | |
| | | | |

பனிரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் லக்கின சுகாதிபதியுடன் கூடி, குடும்பாதி பன் செம்பாம்புடன் பிதுர்ஸ்தான மேறி யிருந்தால், தந்தைவர்க்கம் ஐந்தில் விர்த்தி உபயம். பத்தாண்டிற்குள் பிதா காலனூர் சேர்வனென்பர்.

**லக்கினம் 3-க்குக் கூடிய சக்கரம் 180.**

மிதுனச் சூரியன் பலன்.

முற்றிற்று.

உ

சிவமயம்.

## பார்வதிக்கி பரமசிவன்
## உபதேசித்த

# ஈஸ்வர நாடி சோதிடம்

## சூரியகாண்டம்.

---

### கடகச் சூரியன்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல சூ |
| | | | |
| | | | சு |

(1)

உதையத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் பகையடைந்து, பிதுர்ஸ்தானத்தை சுக லாபாதிபதியால் பார்க்கப்பட்டால், தந்தை வர்க்கம் மூவர், தந்தை இருபத்து நான்கில் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல சூ |
| | | | |
| | | | ச—கு செ |

(2)

உதையத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று, பாக்கிய ஸ்தானத்தை பிறை குரு சேய் இவர்களால் பார்க்கப்பட்டிருந்தால், ஜாதகன் நாற்பது வயது வரையில் நல்ல யோகத்தை அடைவனென்பர்.

## (3)

| | | | |
|---|---|---|---|
| | | சனி | |
| | | | ல-சூ குரு |
| | | | |
| | | | |

உதையத்தில் பிதுர்க்காரகன் ஆறு ஒன்பது இந்த வீட்டுக்கு அதிபதியுடன் கூடி, ஏழெட்டுக் குடையவனால் பார்க்கப்பட்டால் த்விதியாதிபன் திசையில் பிறந்த ஜாதகன் அங்கயீனனாவ னென்பர்.

## (4)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல-சூ கே |
| குரு | | | |
| | | | |

உதையத்தில் பிதுர்க்காரகன் செம்பாம்புடன் கூடி, பாக்கியாதிபதிபன் சப்தம கேந்திரத்தில் ஏகனாய் நீச்ச மடைந்திருந்தால் தந்தை ஏகன், சமயோகம். கணித சாஸ்திரி. இருபத்துக்கு மேல் பிதா மரணமாவ னென்பர்.

## (5)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல சூ |
| ச | | | |
| | | | செ |

உதையத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று, லக்கினாதிபனால் பார்க்கப்பட்டு பிதுர் ஸ்தானத்தை பூமகனால் நோக்கப்பட்டு மிருந்தால், தந்தை ஏகன், தனாதிபன் திசையில் அக்கினி பீடை சகோதரி மரண முதலியவை யுண்டென்பர்,

## (6) (இரண்டாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | சூ-பு |
| | | | |

இரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் ஸ்வக்ஷேத்திரனாய் திருதிய விரையாதிபனுடன் சம்மந்தனாயிருந்தால் தந்தையுடன் ஆண் நாலு, பெண்ணொன்று, பிதா ஏகனாய் தனித்து வைத்திய தொழில் செய்வ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | சூ-சு கே |
| | சனி | | |

## (7)

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் சுகலாபாதிபன் கேதுவுடன் கூடி, பஞ்சம திரிகோணமடைந்த ரவி புதல்வனால் நோக்கப்பட்டால், தந்தை வர்க்க மெல்லா நாசம், தந்தை இருபத்தைந்தில் மரலியூர் புகுவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | சூ |
| | சனி | | |

## (8)

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன், ஏகனாய் ஸ்வக்ஷேத்திரம் பெற்று பஞ்சம திரிகோண மேறிய சப்தம அஷ்டமாதிபனால் பார்க்கப்பட்டால், தந்தை ஏகன். பிதா தீர்க்கம். எழுபதுக்கு மேல் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| சனி சு | குரு | | |
| | | | ல |
| | | | சூ-சு கே |
| | | | |

## (9)

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் சுகலாபாதிபன் கேது இவர்களுடன் கூடி பாக்கியாதிபன் திருஷ்டி யடைந்து இரவி புதல்வன் பிரை யிவர் ஒன்பதாமிட மேறியிருந்தால் ஜாதகனுக்கு இருபத்தொன்றில் தந்தை மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| சனி | | | |
| | | | ல |
| | | | சூ |
| | | | |

## (10)

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் ஸ்வக்ஷேத்திரம் பெற்று பிதுர் ஸ்தானத்தில் மூடனிருந்தால், ஜாதகன் ஜெனித்த ஆண்டில் தந்தைக்குக் கர்மமுண்டென்பர்.

## (11) (மூன்றாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| சு | | | ரா |
| | | | ல |
| | | | |
| சனி | | | சூ-சு |

மூன்று மிடத்தில் பிதுர்க்காரகன் நீச்ச மடைந்த அசுர குருவுடன் கூடி, சப்தம அஷ்டமாதிபனால் பார்க்கப்பட்டு பாக்கியத்தில் ஏகனா யமர்ந்த லக்கினாதிபனாலும் நோக்கப்பட்டால் ஜாதகனுக்கு பதினாறு வயதிற்குமேல் பிதா மரண மாவனென்பர்.

## (12)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | |
| | | | சூ-பு சு |

மூன்றாமிடத்தில் பிதுர்க்காரகன் புதன் பளிங்கு இவர்களுடன் கூடி யிருந்தால், தந்தை வர்க்கம் ஆணிரண்டு, பத்து வயதிற்கு மேல் பிதா பிதாவர்க்கத்திற்கு தெத்தாவனென்பர்.

## (13)

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| | | | ல |
| | | | |
| | | | சூ-பு கே |

மூன்றாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய விரையாதிபதி செம்பாம்பு இவர்களுடன் கூடி பாக்கியாதிபதி தசம கேந்திரம் பெற்றிருந்தால், தந்தை வர்க்கம் ஆறு, குடும்பாதிபன் திசையில் பிதா மரணமாவனென்பர்.

## (14)

| | | | |
|---|---|---|---|
| குரு | | | |
| | | | ல |
| | | | |
| | | | சூ |

மூன்று மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் பகையடைந்து ஸ்வக்ஷேத்திரம் பெற்று பிதுர்ஸ்தானாதிபனால் பார்க்கப்பட்டால் பிதா ராஜவல்லபன், கல்வியுள்ளன், பிரபல தயாபரன், சீமான் என்னும் பரோபகாரனா யிருப்பனென்பர்.

## (15)

| | | | |
|---|---|---|---|
| சனி | | | |
| | | | ல |
| | | | |
| | | | ஞா-ச |

மூன்றாமிடத்தில் பிதுர்க்காரகன் லக்கினாதிபதியுடன் கூடி, சப்தம அஷ்டமாதிபதி நவதிரிகோணம் பெற்றிருந்தால் பனிரண்டு வருடத்தில் தந்தை மரணமடைவனென்பர்.

## (16) (நான்காமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | |
| | | ஞா | சு |

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நீச்சம் பெற்று நீச்ச புகரால் பிதுர்ஸ்தானத்தை நோக்கப் பட்டிருந்தால் தந்தைக்கு தாரமிரண்டு, தந்தை ஏகனாய்ப்பிரிந்து உத்தியோக மூலம் மேன்மை யடைவனென்பர்.

## (17)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | |
| செ | | ஞா-பு | |

நான்காமிடத்தில் திருதிய விரையாதிபனுடன் பிதுர்க்காரகன் கூடி, பாக்கியஸ்தானத்தை பஞ்சம கர்மாதிபதியால் நோக்கப்பட்டால், தந்தை வர்க்கமிருவர், தந்தைகள் வர்த்தக மூலம் சுகமுள்ளவர்களாயிருப்பரென்பர்.

## (18)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | |
| செ | | ஞா | சு |

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று சுக பஞ்சம கர்மலாபாதிபதிகளால் பிதுர் ஸ்தானத்தை நோக்கப் பட்டிருந்தால் தந்தை வர்க்கம் ஆணிருவர், ஐந்து வயதில் பிதா மரணமாவனென்பர்.

## (19)

| | | | |
|---|---|---|---|
| கே ச | | | |
| | | | ல |
| சனி | | | |
| | | சூ-பு | சு |

நான்கா மிடத்தில் பிதுர்க்காரகன் தன பஞ்சமாதியுடன் கூடி, காரி திருஷ்டி யடைந்து பாக்கியத்திலிருக்கும் பிறைகே துவை நீச்ச கவியால் நோக்கப்பட்டால் தந்தை ஏகன், தந்தை அன்னிய தேச சஞ் சாரமுள்ளவ னென்பர்.

## (20)

| | | | |
|---|---|---|---|
| | | | குரு |
| | | | ல |
| | | | |
| | | சூ செபு | |

நான்கா மிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய பஞ்சம கர்ம விரையாதிபதிகளு டன் கூடி, பனிரண்டா மிடத்தி லிருக்கும் பிதுர்ஸ்தானதிபனல் நோக்கப்பட்டிருந் தால் தந்தை வர்க்கம் ஆணிருவர், பிதாக் கள் தனித்தனி பிரிந்திருப்பார்க ளென் பர்.

## (21) (ஐந்தாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | |
| | சூ-பு | | செ |

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் திரு திய விரையாதி பதியுடன் கூடி, பிதுர் ஸ்தானத்தை மூன்றுமிடத்தி லிருக்கும் பூமகனல் நோக்கப்பட்டால், தந்தை வர்க் கம் ஆண் மூவர், தனித்தனி பிரிந்திருப்ப ரென்பர்.

## (22)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல குரு |
| | | | செ |
| | சூ சனி | | |

ஐந்தா மிடத்தில் பிதுர்க்காரகன் தன் புத்திரனுடன் கூடி, சஞ்சம கர்மாதி பன் திருஷ்டி யடைந்து பிதுர்ஸ்தானதி பதி லக்கினகேந்திரம் பெற்றல் பனிரண்டு வயது முதல் ஜாதகன் பிதுராதிகளுடன் விவகாரம் செய்து அலைவனென்பர்,

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | |
| | சூ-பு கே | | |

## (23)

ஐந்தா மிடத்தில் பிதுர்க்காரகன் அறிஞன் சிகியுடன் கூடி, குடும்பாதிபன் திசையில் பிறக்கில், தந்தை வர்க்கம் ஆணிரண்டு, பெண்ணொன்று, பிதா தொழில் நிலையில்லாதவன், இருபத்தைந்தில் பிதா மரணமாவ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| | | | ல |
| | | | |
| | சூ சனி | | |

## (24)

ஐந்தா மிடத்தில் பிதுர்க்காரகன் தன் புதல்வனுடன் கூடி, பாக்கியாதிபன் கர்ம ஸ்தானம் பெற்றிருந்தால், பிதா தொடுத்த காரிய முடிப்பன். இருபத்து மூன்றில் பிதா காலமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| கே | | | |
| | | | ல |
| சனி | | | |
| | சூ-பு | | |

## (25)

ஐந்தா மிடத்திலிருக்கும் பிதுர்க்காரகன் திருதிய விரயாதிபனுடன் கூடி பிதுர் ஸ்தானம் பெற்ற கேதுவை சப்த அஷ்டமாதிபனால் நோக்கப்பட்டால் தந்தை ஏகம், பின் ஆண் ஒன்று. பெண்ணொன்றும். பிதா மேன்மையுள்ளவனா யிருப்ப னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | |
| சூ | | | குரு ச, செ |

## (26) ஆறாமிடம்.

ஆறாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் தனித்து, பிதுர் ஸ்தானத்தை பிரை குரு சேய் இவர்களால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தை ஏகன், தந்தை மத்தியில் கொஞ்சம் குறைந்து சேரியை அடுத்திருப்ப னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| செ ரா | | | |
| | | | ல |
| சனி | | | |
| சு | | | |

## (27)

ஆரூ மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று, ஒன்பதாமிட மேறிய ராகு குருதியை சப்தமம் பெற்ற காரியால் நோக்கம் பெற்றிருந்தால், தந்தை வர்க்க மிருவர், இருபத்தொன்றில் பிதுர் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | |
| சூ-பு | | | சனி |

## (28)

ஆரூ மிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய விரையாதிபனுடன் கூடி, பிதுர் ஸ்தானத்தை திருதிய ஸ்தானம் பெற்ற இரவி புதல்வனால் நோக்கப்பட்டிருந்தால் தந்தை வர்க்கம் ஆண் நாலு, பெண் ணிரண்டாம், பிதா சமயோகமுள்ளவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| | | | |
| சூ-பு சனி | | | செ |

## (29)

ஆரூ மிடத்தில் பிதுர்க்காரகன் தன் மகன் பிரை மகன் இவர்களுடன் கூடி, பிதுர் ஸ்தானத்தை பஞ்சம கர்மாதிபனால் நோக்கப்பட்டால், தந்தைக்கு தார மிரண்டாம், தந்தை முப்பத்திரண்டு வரையில் ஜீவிப்பனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| சனி | | | |
| | | | ல |
| | | | |
| சூ-பு ரா | | | ச |

## (30)

ஆரூ மிடத்தில் பிதுர்க்காரகன் புதன் ராகு வுடன் கூடி, பிதுர் ஸ்தான மேறிய சனியை லக்கினாதிபதியால் நோக்கப்பட்டால் ஜாதகன் ஜெனனமுதல் ரோகத்தால் துன்பப்பட்டு நாலு மாதத்தில் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ரா | | | |
| | | | ல |
| சு-பு | | | |
| | | | |

## (31) (ஏழாமிடம்.)

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய விரையாதிபனுடன் கூடி, ஒன்பதில் ராகு யிருந்தால் தந்தை வர்க்கம் நிலைப்பு ஆண் மூன்று, பிதா உத்தியோகன், ஞான சாஸ்திரி கல்ப்பம் சாப்பிடுவனென்பர்,

| | | | |
|---|---|---|---|
| ச | | | |
| | | | ல |
| சு-பு கே | | | |
| | | | |

## (32)

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் செம்பாம்பு திருதிய விரையாதிபனுடன் கூடி லக்கினாதிபதி பிதுர் ஸ்தானம் பெற்றிருந்தால் தந்தை வர்க்கம் ஆண் நாலு, தந்தை யோகவான், யோக்கியன், பந்து ரக்ஷகன், மத்தியகாலத்தில் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| சு-ச ரா | | | |
| | | | குரு |

## (33)

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் கரும்பாம்பு சுக லாபாதிபதியுடன் கூடி. திருதிய ஸ்தானத்திலிருக்கும் பாக்கியாதிபதியால் பிதுர் ஸ்தானத்தை நோக்கப்பட்டால், தந்தையுடன் பெண் ஜெனகம், தந்தை அந்தத்தில் கஷ்டத்தை அடைவனென்பர்

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல |
| சு ச-பு | | | |
| | | | |

## (34)

ஏழாமிடத்தி லிருக்கும் பிதுர்க்காரகன் லக்கின திருதிய விரையாதி பதிகளுடன் கூடியிருந்தால், தந்தை ஏகன், பிதா யோகவானையும் வாகனமுள்ளவனுயு மிருப்பனென்பர்.

## (35)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | ல குரு |
| சூ | | | |
| | | | |

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் தனித்து, பிதுர் ஸ்தானாதிபதி லக்கின கேந்திரம் பெற்று ஒருவர்க் கொருவர் பார்வை யுண்டானால் தந்தை வர்க்கம் ஆண் மூவர், கனிட்டன் வித்தையில் பண்டிதன், தனித்தனி பிரிந்திருப்ப ரென்பர்.

## (36) (எட்டாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சூ-பு சு | | | ல |
| | | | சனி |
| | | | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய சுக லாப விரையாதிபதிகளுடன் கூடி இரண்டா மிடமேறிய சப்தம அஷ்டமாதிபனால் பார்க்கப்பட்டால் தந்தை உபய தாரத்தை யுடையவன், தந்தை மேலான அதிகாரி, இருபதில் மரணமாவனென்பர்.

## (37)

| | | | |
|---|---|---|---|
| பு | | | |
| சூ | | | ல |
| | | | |
| | | | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் தனித்து திருதிய விரையாதிபன் பிதுர்ஸ்தான மேறியிருந்தால் ஜாதகனுக்கு முப்பத் தொன்பதா மாண்டில் தந்தை காலமாவனென்பர்.

## (38)

| | | | |
|---|---|---|---|
| பு-சு | | | |
| சூ-ச செ | | | ல |
| | | | |
| சனி | | | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் லக்கின பஞ்சம கர்மாதிபதிகளுடன் கூடி, சப்தம அஷ்டமாதிபனால் நோக்கப்பட்டு பிதுர்ஸ்தானத்தில் உச்ச நீச்ச கிரகங்கள் கூடியிருந்தால், தந்தை வர்க்கம் நாலு, பிதாவுக்கு மத்தியகாலம் நேத்திரம் பின்னமாகுமென்பர்.

## (39)

| | | | |
|---|---|---|---|
| குரு ச | | | |
| கு-பு செ | | | ல |
| | | | |
| | | | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய பஞ்சம கர்ம விரையாதிபதிகளுடன் கூடி பாக்கியத்தில் பிதுர் ஸ்தானாதிபதியுடன் லக்கினாதிபதி சம்மந்தப் பட்டிருந்தால் தந்தை வர்க்கம் மூவர், தந்தை பத்தாண்டில் மரணமாவனென்பர்.

## (40)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சூ | | | ல |
| | | | குரு |
| | | | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று வித்தியா ஸ்தானம் பெற்ற பிதுர் ஸ்தானாதிபனால் நோக்கப்பட்டால் பிதா ஒரு நகரத்திற் கதிபன், சத்திரம் குளம் திருப்பணி முதலிய சத்கரும செய்கை உள்ளவனாயிருப்பனென்பர்.

## (41) (ஒன்பதாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| சூ | | | |
| குரு பு | | | ல |
| | | | |
| | | | |

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் மித்ருத்வமாய் ஏகனாயிருந்து பிதுர் ஸ்தானாதிபதி அஷ்டமத்தில் இருதிய விரையாதிபதியுடன் கூடியிருந்தால் தந்தைக்கு விழியில் வடுவுண்டாம், தந்தை ஜாதகன் ஜெனித்தவுடன் மறைந்து போவனென்பர்.

## (42)

| | | | |
|---|---|---|---|
| சூ-ச செ | | குரு | |
| | | | ல |
| | | | |
| | | | |

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏக பஞ்சம கர்மலாபாதிபதியுடன் நின்று பிதுர் ஸ்தானாதிபதி லாபஸ்தானமேறியிருந்தால் ஜாதகனுக்கு இருபத்தேழில் பிதா மரணமாவனென்பர்.

## (43)

| | | | |
|---|---|---|---|
| சூ-பு | | | |
| | | | ல |
| | | | |
| | | | சனி |

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய விரையாதிபனுடன் கூடி மூன்றுமிடமேறிய சப்தம அஷ்டமாதிபனால் பார்க்கப்பட்டால் தந்தைக்கும் ஜாதகனுக்கும் விரோத முண்டென்பர்,

## (44)

| | | | |
|---|---|---|---|
| சூ-பு கே | | | |
| | | | ல |
| | | | |
| | | | செ |

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய விரையாதிபன், சிகி இவர்களுடன் கூடி, மூன்றுமிட மேறிய பஞ்சம கர்மாதிபதியால் பார்க்கப்பட்டால் தந்தையுடன் ஆணிரண்டு, தந்தை அல்பஜீவன முள்ளவனா யிருப்பனென்பர்.

## (45)

| | | | |
|---|---|---|---|
| சூ-பு | | | |
| | | | ல |
| | | | |
| | | | சு |

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய விரையாதிபனுடன் கூடி, நீச்சம் பெற்ற சுக லாபாதிபதியால் பார்க்கப்பட்டால் பிதா தேசம் சுற்றி ஜீவிப்பன், ஐந்து வருஷத்தில் தந்தைவர்க்கமெல்லாம் நாசமடையுமென்பர்.

## (46) (பத்தாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | சூ | | |
| | | | ல |
| | | | |
| | | சனி | |

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் உச்சம் பெற்று சுக கேந்திரம் பெற்ற உச்ச கரியால் நோக்கப்பட்டால் பிதா அரசன் மனைவியால் துன்பபடுவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சூ-சு ரா | | |
| | | | ல |
| | | | |
| | | சனி | |

## (47)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக லாபாதிபன் கருநாகம் இவர்களுடன் கூடி உச்ச சனியால் நோக்கம் பெற்றால், தந்தை வர்க்கம் ஆறு, இருபதுக்கு மேல் பிதா மரணமடைவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| பு | சூ | | |
| | | | ல |
| | | | |
| | குரு | | |

## (48)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று, பிதுர்ஸ்தான மேறிய நீச்ச புதனை பஞ்சம திரிகோணம் பெற்ற பாக்கியாதிபனால் நோக்கப்பட்டால், பதினேழில் பிதுர் மரணம், ஜாதகன் அநேக கர்மம் செய்வனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சூ-பு சு | | |
| | | | ல |
| | | | குரு |
| | | | |

## (49)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் மால் புகருடன் கூடி, பிதுர்ஸ்தானாதிபதி இரண்டாமிடமேறி யிருந்தால் பிதாவிருவர், தந்தை தீர்க்கம்முப்பதில் கனிட்ட பிதா காலில் ரிணம் கண்டு மரணமடைவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சூ | | |
| சனி | | | ல |
| | | | |
| | | | |

## (50)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் தனித்து சப்தம அஷ்டமாதிபனால் நோக்கப்பட்டால் தந்தை வியாபார மூலம் மேன்மையும் கீர்த்தியு மடைவன், குணவான், பூமியுண்டாம், பிதாவுக்கு உபய தாரமுண்டென்பர்.

## (51) (பதினோராமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| சனி | | சூ-பு | |
| | | | ல |
| | | | |
| | | | |

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய விரையாதிபனுடன் கூடி, சப்தம அஷ்டமாதிபதி ஒன்பதாமிட மேறியிருந்தால், தந்தை வர்க்கம் ஆண் மூன்று, இருபதுக்கு மேல் பிதா மரணமாவனென்பர்.

## (52)

| | | | |
|---|---|---|---|
| | | சூ | |
| | | | ல |
| | | | |
| | குரு | | |

பதினோராமிடத்தி லிருக்கும் பிதுர்க்காரகனை பஞ்சம திரிகோணம் பெற்ற பிதுர் ஸ்தானாதிபனால் நோக்கப்பட்டால் தந்தை இருவர், கீர்த்தியுள்ளவர்கள், ஜாதகனுக்கு இருபத்தேழில் பிதா மரணமடைவனென்பர்.

## (53)

| | | | |
|---|---|---|---|
| | | சூ-பு | |
| | | | ல |
| | | | |
| | சனி | | |

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய விரையாதிபனுடன் பஞ்சம திரிகோணம் பெற்ற சப்தம அஷ்டமாதிபதியால் நோக்கப்பட்டால், தந்தை வர்க்கம் ஆண் நாலு, பூமி மூலம் சமயோக முண்டென்பர்.

## (54)

| | | | |
|---|---|---|---|
| | | சூ | |
| | | | ல |
| | | | |
| | ச | | |

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் தனித்து பஞ்சம திரிகோணம் பெற்ற லக்கினாதிபனால் பார்க்கப்பட்டால் பதினோருவயதில் தந்தை வர்த்தக மூலம் புண்ணியக்ஷேத்திர மடைந்து மரணமாவனென்பர்.

## (55)

| | | | |
|---|---|---|---|
| | | சூ-சு கே | |
| | | | லை |
| | | | |
| | | | |

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் செந்நாகன் சுக ஸ்தானாதிபதி இவர்களுடன் சம்மந்தப்பட்டிருந்தால் தந்தை வர்க்கம் ஆணிரண்டு, பெண்ணிரண் டென்பர்.

## (56) (பனிரண்டாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | | | சூ-சு கே |
| | | | லை |
| | | | |
| | | | |

பனிரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் கேது பார்க்கனுடன் கூடியிருந்தால் பிதாவின் சகோதரம் ஆணிரண்டு, பெண் ணிரண்டு, பிதா சிலகாலம் ஏற்றமும், சில காலம் இறக்கமுமான தசையுடைய வனா யிருப்பனென்பர்.

## (57)

| | | | |
|---|---|---|---|
| | | | சூ-சு |
| | | | லை குரு |
| | | | |
| | | | |

பனிரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக ஸ்தானாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானாதிபதி லக்கின கேந்திரத்தில் உச்சனா யிருந்தால், தந்தை அல்ப ஜீவனம், பத்து வயது வரை பிதுர் மாதுர் தீர்க்க மென் பர்.

## (58)

| | | | |
|---|---|---|---|
| | குரு | | சூ-பு செ |
| | | | லை |
| | | | |
| | | | |

பனிரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய பஞ்சம சர்ப விரயாதிபதிகளு டன் கூடி, பாக்கியாதி தசம கேந்திரமேறி யிருந்தால், பிதா ஏகன், உத்தியோகன், புத்திரதோஷ முள்ளவனென்பர்.

## (59)

| | | | |
|---|---|---|---|
| | | | சூ-ச பு-சு |
| | | | கே.ல |
| | | | |
| சனி குரு | | | |

பனிரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் விது வக்கிரன் மாலவன் இவர்களுடன் கூடி, தாராபதி சாவகன் இவர்களின் திருஷ்டி யுண்டானால், தந்தை வர்க்க மிருவர், சமயோகமுள்ளவரென்பர்.

## (60)

| | | | |
|---|---|---|---|
| குரு ச | | | சூ |
| | | | ல |
| | | | |
| | | | |

பனிரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று பாக்கியத்தில் பிதுர் ஸ்தானாதிபதியுடன் லக்கினாதிபன் சம்மந்தமுண்டானால், பிதா வேந்தன், தனவான், ராஜயோக முள்ளவனென்பர்.

**லக்கினம் 4-க்குக் கூடிய சக்கரம் 240.**

---

கடகச் சூரியன் பலன்.

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# பார்வதிக்கு பரமசிவன்

# உபதேசித்த

# ஈஸ்வர நாடி சோதிடம்

## சூரியகாண்டம்.

### சிம்ம சூரியன்.

| | | | |
|---|---|---|---|
| | | | செ |
| | | | |
| | | | ல<br>சூ-பு |
| | | | |

(1)

உதயத்தில் பிதுர்க்காரகன் ஸ்வ க்ஷேத்திரனாய், தன லாபாதிபதியுடன் கூடி ஒன்பதாமதி லாபஸ்தான மேறி யிருந்தால், தந்தை வர்க்கம் பத்தில் இருப்பு ஆண் நான்கு, பதினெழில் தந்தை மரணமாவனென்பார்.

(2)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | ல-பு<br>சூ-செ |
| | | | |

உதயத்தில் பிதுர்க்காரகன் தன சுக பாக்கிய, லாபாதிபதிகளுடன் கூடி யிருந்தால், ஜாதகனுக்குப் பதினெழு வருஷத் தில் தந்தை மரணமடைவனென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | சனி |
| | | | ல சூ-பு |
| | | குரு | |

## (3)

உதையத்தில் பிதுர்க்காரகன் தனலாபாதிபதியுடனிருந்து பிதுர் ஸ்தானத்தை திருதிய ஸ்தானம் பெற்ற தேவ குருவாலும், விரைய ஸ்தான மேறிய காரியாலும் நோக்கப்பட்டிருந்தால் தந்தை வர்க்கம் மூன்றில் ஒருவன் ஏகனாய் விலகி நிற்பனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | செ | | |
| சனி | | | |
| | | | ல சூ |
| | | ச | |

## (4)

உதையத்தில் பிதுர்க்காரகன் ஏகனாப் ஸ்வக்ஷேத்திரம் பெற்று, சனி திருஷ்டியடைந்து பாக்கியத்திலிருக்கும் பிதுர் ஸ்தானாதிபதியை விரையாதிபனால் நோக்கப்பட்டிருந்தால், தந்தை ஏகன், ஜாதகன் கெர்ப்பகாலம் பிதா மரணமடைவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| | | | |
| | | | ல சூ.ரா |
| | | | |

## (5)

உதையத்தில் பிதுர்க்காரகனுடன் கரும் பாம்பு கூடி பஞ்சம அஷ்டமாதிபதி பிதுர்ஸ்தான மேறியிருந்தால் தந்தை சகோதரம் நான்கு, பிதுர்கள் நல்ல நிலமை யடைவார்களென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | |
| | | | |
| | | | ல |
| | | பு-சு | சூ செ |

## (6) (இரண்டாமிடம்.)

இரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் சுக பாக்கியாதியுடன் கூடி பிதுர் ஸ்தான மேறிய இரவி புதல்வனை சசிமகன் உசனால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தையுடன் ஆணிருவர், பிதாவுக்குக் காலூனம், ஜாதகன் ஆறு திங்களில் அரிட்டமாவனென்பர்.

## (7)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| செ | | | ல |
| சனி | | | சூ-பு<br>சு |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் புந்தி பார்க்கவனுடன் கூடி பஞ்சம ஸ்தானமேறிய காரியால் நோக்கப்பட்டு பாக்கியாதிபதி உச்சம் பெற்றிருந்தால், தந்தை வேதாந்தி. பனிரண்டில் பிதா ஜலரோகத்தால் மரணமாவனென்பர்.

## (8)

| | | | |
|---|---|---|---|
| சனி | | | |
| | | | |
| | | | ல |
| | | பு | சூ |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று, இனி புதல்வனால் பார்க்கப்பட்டு பிதுர் ஸ்தானத்தை தன லாபாதிபதியால் நோக்கப்பட்டால் தந்தை ஆறு வயதில் குடும்பம் விட்டு மறைந்து போவான். இருபத்தைந்தில் காருகர்மம் செய்யப்படுவனென்பர்.

## (9)

| | | | |
|---|---|---|---|
| | ரா | | |
| | | | |
| | | | ல<br>குரு |
| | | | சூ-பு |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் தன லாபாதிபதியுடன் கூடி பிதுர் ஸ்தானமேறிய ராகுவை பஞ்சம அஷ்டமாதிபனால் நோக்கப்பட்டால், பிதா மேலான யோகமடைவான் ஆயுள் தீர்க்கமென்பர்.

## (10)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | ல |
| | | ச-பு<br>ரா | சூ |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று, பிதுர் ஸ்தானத்தை பிறை புதன் ராகுவால் நோக்கப்பட்டிருந்தால், பிதுர் சகோதரம் நான்கு, ஜாதகன் உடனே மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | ச | | |
| | | | |
| | | | ல |
| | | சூ | |

## (11) (மூன்றுமிடம்.)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நீச்சம் பெற்று விரயாதிபதியால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்கம் ஆணிரண்டு, பெண்ணொன்று, ஐம்பதுக்கு மேல் பிதா மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | ல |
| | | சூ-பு செ | |

## (12)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் தனசுக பாக்கிய லாபாதிபதிகளுடன் கூடியிருந்தால் தந்தை வர்க்கமிரண்டில் கனிட்டன் அன்னிய தேசவாசஞ் செய்வன், பிதா சுதேசத்தில் சமயோகத்தை யடைவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| குரு | | | |
| | | | ல |
| | | சூ | |

## (13)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நீச்சம் பெற்று, சப்தம கேந்திரமேறிய பஞ்சம அஷ்டமாதிபனால் நோக்கப்பட்டால் தந்தையுடன் ஆணொன்று, பதினாறு வயதில் பிதா மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | ல |
| | | சூ-பு ரா | |

## (14)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் ராகு தன லாபாதிபன் இவர்களுடன் கூடியிருந்தால், தந்தை ஏகம், தார மிரண்டு, லக்கினாதிபன் திசையில் பொருள் சேர்க்கையும் மரண முண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| குரு | | | |
| | | | செ ரா |
| | | | ல |
| | | சூ-பு | |

## (15)

மூன்றாமிடத்தில் பிதுர்க்காரகன் பிறை மகனுடன் சம்மந்தனாகி விரைய ஸ்தானமேறிய செய் ராகு யிவர்களை தேவ குருவால் நோக்கப்பட்டால், தந்தை ஏகன் தரித்திரன் திருதிய களத்திர முள்ளவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | ல |
| | சூ-பு | ச | |

## (16) (நான்காமிடம்.)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் தனலாபாதிபதியுடன் கூடி, பிதுர் ஸ்தானத்தை விரையாதிபனால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்கம் பத்தில் எல்லா னாசம். பிதா பாலியத்தில் ஜாதி பேதகனாய் நாற்பத்தைந்தில் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி | |
| | | | |
| | | | ல |
| | சூ ரா | | |

## (17)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் கரும்பாம்புடன் கூடி கர்மஸ்தானமேறிய இரவி மகனால் பார்க்கப்பட்டால் தந்தை வர்க்கமெல்லா னாசம், முப்பத்தொன்றில் பிதாவுக்கு மரண கெண்ட முண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | ல |
| | சூ பு.ரா | | சனி |

## (18

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் கரும்பாம்பு கணக்கன் இவர்களுடன் கூடி த்விதிய ஸ்தானமேறிய ஆறாமுக் குடையவனால் பார்க்கப்பட்டால் தந்தை வர்க்கம் ஆறு, தனித்தனி கஷ்டப்படுவார்கள் தந்தை தாய் தீர்க்க முள்ளவரென்பர்.

## (19)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | ல |
| | ஞா<br>செபு | | |

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் தன சுக பாக்ய லாபாதிபதிகளுடன் கூடி ஒருவர் திருஷ்டியு மில்லாதிருந்தால் தந்தைக்கு எப்போதும் ரோகமுண்டாம், தந்தை பத்தாண்டில் மரணமாவனென்பர்.

## (20)

| | | | |
|---|---|---|---|
| | செ | | |
| | | | |
| | | | ல |
| | ஞா-சு | சனி<br>பு | |

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய கர்மாதிபதியுடன் கூடி ஸ்வக்ஷேத்திரம் பெற்ற பிதுர்ஸ்தானாதிபதியை சனி புத னிவர்களால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்கம் ஆண் ஐந்து தந்தைக்குத் தார மிரண்டென்பர்.

## (21) (ஐந்தா மிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | | | செ<br>சுசனி |
| | | | |
| | | | ல |
| ஞா-பு | | | |

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் தன லாபாதிபதியுடன் கூடி, லாபஸ்தான மேறிய சேய் புகர் கரி இவர்களின் திருஷ்டி யடைந்திருந்தால் தந்தை ஏகன், ஜாதகனால் சுகமனுபவிப்ப னென்பர்.

## (22)

| | | | |
|---|---|---|---|
| | | | செ |
| | | | |
| | | | ல |
| ஞா-ச | | | |

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் விரையாதிபதியுடன் கூடி, லாபஸ்தான மேறிய பாக்கிய ஸ்தானாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால் தந்தைக்குத் தார மிரண்டு, தேச சஞ்சாரம் ரோகமுண்டென்பர்

## (23)

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| | | | |
| | | | ல |
| ஞா-சு | | | |

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய கர்மாதிபதியுடன் கூடி பதினோராமிடமேறிய இரவிபுதல்வனால் பார்க்கப்பட்டால் ஜாதகன் வாரமொன்றில் மரணமாவனென்பர்.

## (24)

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| | | | |
| | | | ல |
| ஞா | | | |

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நட்பு பெற்று ரோக சப்தமாதிபதியால் பதினோராமிடமேறி பார்க்கப்பட்டிருந்தால் ஜாதகன் இருபது வயதில் மரணத்தை யடைவனென்பர்.

## (25)

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| | | | |
| | | | ல |
| ஞா-பு சந் | | | |

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் தனலாப விரையாதிபதிகளுடன் கூடி, பிதுர்ஸ்தானாதிபன் தசம கேந்திர மேறியிருந்தால், பிதா வியாபாரி, பிதா இருபது வரையில் ஜீவித்திருப்பனென்பர்

## (26) (ஆறுமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| ஞா-பு குரு | | | ல |
| | | சனி | |

ஆறுமிடத்தில் பிதுர்க்காரகன் தனபஞ்சம அஷ்டம லாபாதிபதிகளுடன் கூடி பாக்கியத்தை திருதிய ஸ்தானம் பெற்ற இரவி மகனால் நோக்கப்பட்டால் பிதா ஏகன், பதினாறில் மரணமாவனென்பர்.

## (27)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | குரு |
| சூ | | | ல |
| | | சனி | |

ஆறுமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் தனித்து உச்சகுரு திருஷ்டியடைந்து பிதுர் ஸ்தானத்தை சனியால் நேரே நோக்கப்பட்டிருந்தால் தந்தைக்கு கைத்தொழில் விர்த்தியுண்டாம். தந்தையுடன் ஆண் ஆறு விர்த்தியுண்டென்பர்.

## (28)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சனி | | | |
| சூ-ச | | | ல |
| | | | |

ஆறுமிடத்தில் பிதுர்க்காரகன் விரையாதிபதியுடன் கூடி பிதுர் ஸ்தானத்தை சப்தம கேந்திரம் பெற்ற சனியால் நோக்கப்பட்டு ஜன்மாதிபன் திசையில் பிறந்தால் தந்தையுடன் பெண்ணொன்று, இருபத்தைந்தில் குடும்பம் பிரிபடுமென்பர்.

## (29)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | குரு |
| சூ-பு | | | ல செ |
| | | | |

ஆறுமிடத்தில் பிதுர்க்காரகன் தன லாபாதிபதியுடன் கூடி உச்ச குரு திருஷ்டியடைந்து பிதுர்ஸ்தானாதிபன் லக்கின கேந்திரம் பெற்றால், தந்தையுடன் ஆண் ஆறு, பெண்ணிரண்டு, ஆணில் ஒருவன் அந்தகனென்பர்.

## (3

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| சூ-பு ரா | | | ல |
| | சனி | | |

ஆறுமிடத்தில் பிதுர்க்காரகன் கரும்பாம்பு பிரைமகன் இவர்களுடன் கூடி சுக கேந்திர மேறிய ஆறேழுக் குடையவனால் பார்க்கப்பட்டிருந்தால் ஜாதகன் நான்கு வருடத்தில் மரணம், பின்னும் பெண் ஜெனனமுண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சனி கே | | |
| சூ | | | |
| | | | ல |
| | | | |

## ((31) ஏழாமிடம்.)

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் தனித்து பிதுர் ஸ்தானத்தில் சனி கேது கூடி யிருந்தால் பிதுர் தீர்க்கம் ஜாதகன் ஜெனன முதல் தந்தைக்கு, வியாபார மூலம் அதிக லாபமுண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சூ-சு செ | | | |
| | | | ல குரு |
| | | | |

## (32)

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக பாக்கிய, விரையாதிபதிகளுடன் கூடி லக்கின கேந்திரம் பெற்ற கிரகனால் பார்க்கப் பட்டிருந்தால் தந்தை ஆஸ்தியுடையவன் ஐம்பத்திரண்டில் பாகப் பிரிவுண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சூ ரா | | | |
| | | | ல |
| | | குரு | |

## (33)

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் கரும் பாம்புடன் கூடி, பஞ்சம அஷ்டமாதிபனால் நோக்கப்பட்டால் ஜாதகனுக்கு பதினெட்டு வயதிற்கு முன் பிதா மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | ச | | |
| சூ-பு | | | |
| | | | ல |
| | | குரு | |

## (34)

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் தனி லாபாதிபதியுடன் கூடி திருதிய குரு திருஷ்டி யடைந்து, பாக்கியத்தில், விரையாதிபனிருந்தால் தந்தை வர்க்கம், ஆணிருவர் நான்கு வயதில் பிதா மன்னருக்குப் பயந்து ஓடிப்போவானென்பர்.

## (35)

| | | | |
|---|---|---|---|
| | செ | | |
| சூ-சு | | | |
| | | | ல |
| | | குரு | |

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய கர்மாதிபனுடன் கூடி ஸ்வக்ஷேத்திர பிதுர் ஸ்தானாதிபதியை தேவ குருவால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்கம் மூன்றில் ஒருவன் மறைவு மற்றிருவர் விர்த்தி தந்தை இருபத்திரண்டிற்கு மேல் மரணமென்பர்.

## (36) (எட்டாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| சூ குரு | செ | | |
| | | | |
| | | | ல |
| | | | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம, அஷ்டமாதிபதியுடன் கூடி பாக்கியத்தில் ஒன்பதாமாதி ஸ்வக்ஷேத்திரம் பெற்று ஏகனாயிருந்தால், ஜன்மாதிபன்றிசையில் அதிகமேன்மை யடைந்து அந்தியம் களத்திர மரணமடையு மென்பர்.

## (37)

| | | | |
|---|---|---|---|
| சூ-பு சனி | | | |
| | | | |
| | | | ல |
| | | குரு | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் தனசுதன், பிரை சுதனுடன் கூடி, பிதுர் ஸ்தானத்தை பஞ்சம, அஷ்டமாதிபனால் நோக்கப்பட்டால் தந்தை ஏகன் பதினொன்றில் பிதுர் மரணமாவனென்பர்.

## (38)

| | | | |
|---|---|---|---|
| சூ | | | |
| | | | |
| சனி | | | ல |
| | | | ச |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் விரையாதி, பார்வை பெற்று ஸ்வக்ஷேத்திர சனி பார்வையு மிருக்குமானால் பிதா தீர்க்கம் தந்தை யோக்கியனாயும் ரோகமுள்ளவனாயு மிருப்பனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| சூ-பு செ | | | |
| | | | |
| | | | ல |
| | | | |

## (39)

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் தன சுக பாக்கிய லாபாதிபதிகளுடன் கூடியிருந்தால் தந்தை, தரித்திரமுள்ளவன் ஜாதகனுக்கு ஐந்து வயதில் பிதுர் கர்மமுண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| சூ சனி | | | |
| | | | குரு |
| | | | ல |
| | | | |

## (40)

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஆறேழுக் குடையவனுடன் கூடி விரைய மேறிய உச்ச குருவால் நோக்கப்பட்டு ஜன்மாதி திசையில் பிறந்தால் தந்தைக்குத் தாரமிரண்டு புத்திரனால் குடும்ப கலகமுண்டாகி தொழில் குறைவுண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சூ செ | | |
| சனி | | | |
| | | | ல |
| | | | |

## (41) (ஒன்பதா மிடம்.)

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் உச்சனாய் பிதுர் ஸ்தானாதிபதியுடன் கூடி சப்தம கேந்திரமேறிய ஸ்வக்ஷேத்திர சனியால் பார்க்கப்பட்டால் முப்பதில் ஓர் பக்ஷத்தில் பிதுர், மாதுர் இருவரு மரணமாவரென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சூ-பு | | செ |
| | | | |
| | | | ல |
| | | | |

## (42)

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் தன லாபாதிபதியுடன் கூடி பாக்கியாதிபன் லாப ஸ்தானமேறியிருந்தால் தந்தை வர்க்க மிருவர். ஜாதகனுக்கு, இருபத்துநான்கு வயது முதல் தந்தை, ரோணத்தினால் துன்பப்படுவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | கு ரா | | சனி |
| | | | |
| | | | ல |
| | | | |

### (43)

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் உச்சனாய், ராகுவுடன் கூடி அதற்கொன்பதாமிடத்தை பதினோரா மிடமேறிய இரவிசுதனால் நோக்கப்பட்டால் தந்தையுடன் ஆணிரண்டு பெண்ணொன்று இருபதில் தந்தை மரணமாவ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | கு-ச | | |
| | | | |
| | | | ல |
| | | | செ |

### (44)

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் விரையாதிபனுடன் கூடி பிதுர் ஸ்தானாதிபதி ஏகனால் வாக்கு ஸ்தானத்திலிருந்தால் தந்தையுடன் ஆண் மூன்று பெண்ணொன்று பதினைந்து முதல் விவகாரம் ரோணமூலம் பொருள்களழியு மென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | கு.ரா சு | | |
| | | | |
| | | | ல |
| | | சனி | |

### (45)

ஒன்பதா மிடத்திலிருக்கும் பிதுர்க்காரகன் ராகு சுக்கிரனிவர்களுடன் கூடி வீரிய மேறிய ஆறேழாமதி பதியின் திருஷ்டி யடைந்திருந்தால், தந்தை இருபத்தைந்து வயதில் பிதா மரணமாவ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | கு-பு செ | |
| | | | |
| | | | ல |
| | | | குரு |

### (46) (பத்தா மிடம்.)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் பூமகன், மால் இவர்களுடன் கூடி குடும்பஸ்தானமேறிய, பஞ்சம அஷ்டமாதிபனால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்கம் ஆணிரண்டு ஜாதகனுக்கு பத்து வயதிற்கு மேல் பிதா தந்தை வர்க்கம் தெத்தாகி சுகப்படுவ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | ரா | கு-பு செ.சு | |
| | | | |
| | | | ல |
| | | | |

(47)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் குஜன் மால் புகருடன் கூடி பாக்கிய ஸ்தானத்தில் கரும் பாம்பு ஏறியிருந்தால் விவாகத்திற்குப் பின் பிதா மரணமாவ னென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | கு-சு புசனி | |
| | | | |
| | | | ல |
| | | | |

(48)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் பிறை, கதிர் புகல்வர் அசுர குரு இவர்களுடன் கூடியிருந்தால், தந்தை வர்க்கம் ஆண் காது, ஜாதகனுக்கு இருபத்து நான்கில் தந்தை காலனூர் சேருவனென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | கு | |
| | | | |
| | | | ல |
| | | | குரு |

(49)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனைப் பகை யடைந்து குடும்ப ஸ்தானத்திலிருக்கும் பஞ்சம, அஷ்டமாதிபனால் நோக்கப்பட்டிருந்தால் தந்தை வர்க்கம் ஆணி குவரில் ஒருவன் மறைந்துபோவ னென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | கு.ரா செ | |
| | | | |
| | | | ல சனி |
| | | | |

(50)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் சேய், ராகு, இவர்களுடன் கூடி லக்கின கேந்திரம் பெற்ற ஆறெட்டா மாதிபன் திருஷ்டி யடைந்திருந்தால் தந்தை வர்க்கம், ஆண் மூவர் பனிரண்டில் பிதாவுக்கு மரணங் கண்ட முண்டென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | | சூ குரு |
| சனி | | | |
| | | | ல |
| | | | |

## (51) (பதினோராமிடம்.)

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன், கூடி ஒன்பதாமிடத்தை ஆறேழாமாதியால் 3-ம் பார்வை நோக்கபபட்டிருந்தால் பிதாவுக்குக் களத்திர மிரண்டு பிதா முப்பத்தெட்டில் மரணமாவ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சு | | சூ |
| | | | |
| | | | ல |
| | | சனி | |

## (52)

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று பிதுர்ஸ்தான மேறிய திருதிய, கர்மாதிபதியை உச்சனியால் நோக்கப்பட்டிருந்தால், தந்தையுடன் ஆணிருவர் தந்தை ஜாதகன் வாரத்தில் மரணமாவ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | சூ-பு |
| | | | |
| | | | ல |
| ச | | | |

## (53)

பதினோரா மிடத்திலிருக்கும் பிதுர்க்காரகனுடன் தன லாபாதிபன் கூடி பஞ்சம திரிகோண மேறிய விரையாதிபனால் நோக்கப்பட்டால் தந்தையுடன் ஆணிருவர் தந்தை பத்தாண்டில் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | ரா | | சூ |
| | | | |
| | | | ல |
| | | செ | |

## (54)

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் தனித்து கலத்திரிகோணம் பெற்ற ராகுவை வீரிய மிருக்கும் சுக, பாக்கியாதிபனால் நோக்கப்பட்டால் தந்தையுடன், பெண்ணொன்று முப்பதில் தந்தைக்கு விழியூனம் முப்பத்தொன்றில் பிதா காலமடைவ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | சூ |
| | | | |
| | | | ல |
| | | செ | |

## (55)

பதினொராமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று பிதுர் ஸ்தானாதிபதி வீரிய மிடமேறி பாக்கிய ஸ்தானத்தை நோக்கப்பட்டிருந்தால், தந்தை வர்க்கம் ஆணிருவர் தந்தை சமயோகத்தை யடைவனென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி | |
| | | | சூ பு-ரா |
| | | | ல |
| | | | |

## (56) (பனிரண்டாமிடம்.)

பனிரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் பகை யடைந்து கரும்பாம்பு தனலாபாதிபதி இவர்களுடன் கூடி கர்ம ஸ்தானம் பெற்ற சனியால் நோக்கப்பட்டிருந்தால் பிதா, பதினைந்து வயதிற்குள் மரணமாவனென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | சூ |
| | | | ல |
| குரு | | | |

## (57)

பனிரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய், பகைத்து பஞ்சம திரிகோணம் பெற்ற தேவகுருவாய் பிதுர் ஸ்தானத்தை நோக்கப்பட்டிருந்தால் தந்தையுடன் ஆணிரண்டு பெண்ணிரண்டு தந்தை முப்பத்திரண்டில் மரணமாவனென்பார்.

| | | | |
|---|---|---|---|
| குரு | | | |
| | | | சூ |
| | | | ல |
| | | | |

## (58)

பனிரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் தனித்து அஷ்டமாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால் பிதுர் சகோதரம் ஆண் நான்கு, ஒருவன் தத்தெடுப்பான் முப்பத்தைந்து வரையில் தந்தைக்குத் தீர்க்க மென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| | | | சு |
| | | | ல |
| | சனி | | |

## (59)

பனிரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று கர்ம ஸ்தானம் பெற்றிருக்கும் பாக்கியாதிபதியை முடவனால் நோக்கப்பட்டிருந்தால் தந்தை வர்க்கம் ஆணிரண்டு பெண்ணொன்று பிதா வித்தை மூலம் ஜீவிப்பனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| குரு | | | |
| | | | சூ-பு சு |
| | | | ல |
| | | | |

## (60)

பனிரண்டாமிடத்தில், பிதுர்க்காரகன் இரண்டு, மூன்று, பத்து, பதினொன்று இந்த வீட்டுக் கதிபர்களுடன் கூடி ஸ்வக்ஷேத்திரம் பெற்ற பஞ்சம அஷ்டமாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால், தந்தை சமயோக முள்ளவரென்பர்.

**லக்கினம் 5-க்குக் கூடிய சக்கிரம் 300.**

சிம்மச் சூரியன் பலன்.

முற்றிற்று.

உ

சிவமயம்.

பார்வதிக்கு பரமசிவன்

உபதேசித்த

# ஈஸ்வர நாடி சோதிடம்

## சூரிய காண்டம்.

―――:―――

| | | | |
|---|---|---|---|
| | | | |
| செ | | | |
| | | | |
| | | | ல-சூ<br>பு |

### (1) கன்னியா சூரியன்.

உதையத்தில் பிதுர்க்காரகன் லக்கின கர்மாதிபதியுடன் கூடி திருதிய அஷ்டமாதிபதியால் பார்க்கப் பட்டால் தந்தை வர்க்கம் ஆணிரண்டு பெண்ணென்று இருபத்து நான்கில் பிதா மரணமாவ னென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |
| | | | ல-ச<br>சூ-பு |

### (2)

உதையத்தில் பிதுர்க்காரகன் பாக்கிய, கர்மாதிபதியுடன் கூடியிருந்தால் தந்தை வர்க்கம் ஆறில் திர்க்கம் நான்கு, தந்தைக்குத் தாரமிரண்டு ஜாதகன் மாதமொன்றில் அரிட்டமாவ னென்பார்.

## (3)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |
| | | | ல-சூ<br>கு-ச |

உதையத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தம லாபாதிபதியுடன் கூடி ஒருவரும் பாராதிருந்தால், தந்தை சகோதரம் ஆணிரண்டு கனிட்டன் ரோகி விரையாதிபன் திசையில் பிறந்தால் பதினெட்டில் பிதுர் மரணமாவனென்பர்.

## (4)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |
| | | | ல-சூ<br>பு-ச |

உதையத்தில் பிதுர்க்காரகன் ஜன்ம கர்ம, லாபாதிபதிகளுடன் கூடி ஒருவரும் பாராதிருக்கில், பிதாவின் சகோதரர் ஆண் ஆறு பதினைந்து முதல் தந்தை ரோகத்தால் துன்ப படுவனென்பர்.

## (5)

| | | | |
|---|---|---|---|
| | | ச | செ |
| | | | |
| | | | |
| | | | ல-சூ |

உதையத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் பகையடைந்து திருதிய, அஷ்டமாதிபனால் பார்க்கப்பட்டு பாக்கியத்தில் லாபாதிபன் உச்சம் பெற்றிருந்தால் தந்தை ஏகம் விரையாதிபன் திசையில், பிறந்தால் ஜாதகனுக்கு, பதினாறில் பிதா அரிட்டமாவனென்பர்.

## (6) (இரண்டாமிடம்)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| குரு | | | |
| | | சூ-பு | ல |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் நீச்சனாய், ஜன்ம, கர்மாதிபதியுடன் கூடி பிதுர் ஸ்தானத்தை பஞ்சம திரிகோண மேறிய நீச்ச குருவால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்க மிருவர் பதினைந்து வருஷத்திற்குள் தந்தை வர்க்கம் நாச மென்பர்.

## (7)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |
| | | சூ-பு சனி | ல |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஜன்ம, பஞ்சம ரோககர்மாதிபதிகளுடன் கூடி விரையாதிபன் திசையில் பிறந்தால் தந்தை வர்க்கம் மூன்றில் ஒருவன் இளமை, மரணம் தந்தை கெர்ப்பத்தில் நெரியாண மடைவனென்பர்.

## (8)

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| | | | |
| சனி | | | |
| | | சூ-பு | ல |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஜன்ம கர்மாதிபதியுடன் ஐந்தாமிடமேறிய காரியாலும் எட்டாமிடமேறிய தேவகுருவாலும் நோக்கப்பட்டால் தந்தை ஏகம், முன் சுகமற்பம் பின் ஜாதகன் ஜெனன காலமுதல் தந்தைக்கு மேன்மையுண்டா மென்பர்.

## (9)

| | | | |
|---|---|---|---|
| | | ரா | |
| | | | |
| | | | |
| | சு | சூ-பு | ல |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஜன்ம கர்மாதிபதியுடன் ஒன்பதாமிடமேறிய ராகுவை தன பாக்கியாதிபதியால், பார்க்கப் பட்டால் பிதா ஏகம் விரையாதிபன் திசையில் பிறந்தால் கடைசி பிதா மரணமாவ னென்பர்.

## (10)

| | | | |
|---|---|---|---|
| | | | குரு |
| | | | |
| | | | |
| | பு-சு | சூ | ல |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நீச்சமடைந்து சுக, சப்தமாதிபன் திருஷ்டி யடைந்து பிதுர் ஸ்தானத்தை புதன் சுக்கிரனிவர்களால் பார்க்கப்பட்டால் பிதாவுடன் ஆணிரண்டு பூமி, மூலம் உத்தியோக முண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| குரு | | | |
| | | | |
| | | | செ |
| | சூ-சு | | ல |

## (11) (மூன்றுமிடம்.)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் லாபாதிபதியுடன் கூடி சுக. சப்தமாதி பதியாலும் விரைய மேறிய பூமகனாலும் நோக்கப்பட்டால் முப்பதில் பிதுர் மரணம். முப்பதுக்கு மேல் தாய் மரணமாவனென்பர்

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |
| | சூ-ச குரு | | ல சனி |

## (12)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் சுக, சப்தம லாபாதி பதிகளுடன் கூடி லக்கின கேந்திரம் பெற்ற பஞ்சம ரோகாதிபதியால் நோக்கப்பட்டால் விரையாதிபன் திசையில் விவாகம் புத்திர விர்த்தி முதலிய பலனுண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | குரு |
| | | | |
| | சூ | | ல |

## (13)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று பதினோராமிடமேறிய உச்ச குருவால் நோக்கப்பட்டால் தந்தை ஏகன் பிதாவுக்குத் தார மூன்று ஜாதகன் ஜெனன முதல் சௌக்கிய முண்டாமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | ச | |
| | | | குரு |
| | | | |
| | சூ-சு | | ல |

## (14)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் தன பாக்கியாதியுடன் கூடி பாக்கிய லாப மேறிய உச்ச மதி குரு, இவர்களின் பார்வையுண்டாகியிருந்தால் தந்தையுடன் ஆண் ஆறு தீர்க்கம் தனித்தனி பிரிந்து வியாபார மூலம் மேன்மை யடையவரென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி | |
| | | | குரு |
| | | | |
| | சூ | | ல |

## (15)

மூன்றாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய்த் தனித்து லாபமேறிய உச்ச குருவாலும் பிதுர் ஸ்தானமேறிய இரவி புதன்களாலும் நோக்கப்பட்டிருந்தால், பிதா சில காலம் ஏற்றமும் சிலகாலம் இறக்கமுமான பொருள் சுகமடைவனென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| | | | |
| குரு சு | | | |
| சூ-பு | | | ல |

## (16) (நான்காமிடம்.)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் ஜன்ம கர்மாதிபதியுடன் கூடி, பஞ்சம கோணாதிபதியால் பார்க்கப்பட்டு பிதுர் ஸ்தானாதிபதி நீசனுடன் பஞ்சம திரிகோணம் பெற்றால், தந்தையுடன் பெண்ணொன்று முப்பத்தெட்டில் மரணமாவனென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | குரு | |
| | | | |
| | | | |
| சூ-சு | | | ல |

## (17)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் தனபாக்கியாதிபனுடன் கூடி, ஏக சப்தமாதிபதியான குரு பிதுர் ஸ்தானமேறியிருந்தால் பிதாவின் சகோதரம் ஆணிரண்டு பெண்ணிரண்டு ஜாதகனுக்கு இருபத்திரண்டில் பிதா மரணமாவனென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | | ச |
| | | | |
| | | | |
| சூ-பு குரு | | | ல |

## (18)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் ஜன்ம ஏக சப்தம கர்மாதிபதிகளுடன் கூடி பத்தாமிடமேறிய லாபாதிபனால், நோக்கப்பட்டால் தந்தையுடன் ஆண் ஆறு பெண்ணிரண்டில் ஒருத்தி வழிமாறுவன் இருபத்தொன்பது வரை பிதா தீர்க்கமென்பார்.

## (19)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சு ரா | | | |
| | | | |
| சூ-பு | | | ல |

நான்கா மிடத்தில் பிதுர்க்காரகன் ஜன்ம சப்தமாதிபதியுடன் கூடி பிதுர் ஸ்தானாதிபன் ராகுடன் கூடி ஆறாமிட மேறியிருந்தால் தந்தைக்கு தார மிரண்டு ரோக முள்ளவன் வியாபார மூலம் ஜீவனம் இருபதுவரை பிதா தீர்க்க மென்பர்.

## (20)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | குரு |
| சூ-ச செ பு | | | ல |

நான்கா மிடத்திலிருக்கும் பிதுர்காரகன் ஜென்மம் திருதிய அஷ்டம லாபம் இந்த வீட்டுக் குடையவர்களுடன் கூடி பனிரண்டா மிடத்திலிருக்கும் சுக சப்தமாதிபனால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தைக்கு தாரம் நாலு களத்திர மூலம் துன்பமடைவனென்பர்.

## (21) (ஐந்தாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| செ | | | |
| சூ-பு | | | |
| | | | ல |

ஐந்தா மிடத்திலிருக்கும் பிதுர்க்காரகன் ஜன்ம கர்மாதிபனைக் கூடி ரோக ஸ்தான மேறிய பூமகனால் பிதுர் ஸ்தானத்தை நோக்கப்பட்டிருந்தால் தந்தை ஏகம் பதினொன்றில் பிதா மரணமாவனென்பர்.

## (22)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| சூ செ | | | |
| | குரு ரா | | ல |

ஐந்தா மிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய அஷ்டமாதிபனுடன் கூடி பிதுர் ஸ்தானத்தை மூன்றாமிட மேறிய குரு ராகு இவர்களால் நோக்கப்பட்டால் பிதாவுடன் பெண் ஏகம் பிதா அல்ப்ப சுகமடைவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | ச | |
| | | | |
| சு-பு கே | | | |
| | குரு | | ல |

## (23)

ஐந்தா மிடத்தில் பிதுர்க்காரகன் செம்பாம்பு பிறை மகன் இவர்களுடன் கூடி பாக்கிய மேறிய லாபாதிபதியை தேவ குருவால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்கம் மூன்றில் ஒருவன் ஞானி பதினொந்திற்கு மேல் தந்தைக்கு ரோக முண்டாம் சமயோக மென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | சனி |
| சு-பு | | | |
| | | | ல |

## (24)

ஐந்தா மிடத்தில் பிதுர்க்காரகன் ஜன்ம கர்மாதிபனைக் கூடி லாப மேறிய சனியால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்கம் ஆணிரண்டு தந்தை பெண்மூலம் போய் மூலம் ஆண்பட்டுவென் கூலி ஜீவனம் தந்தைக்கு தார மூன்றென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | ரா | |
| | | | |
| சு பு-ச | | | |
| | | | ல |

## (25)

ஐந்தா மிடத்தில் பிதுர்க்காரகன் ஜென்ம, தன பாக்கிய கர்மம் இந்த வீட்டுக் குடையவர்களுடன் கூடி பாக்கிய ஸ்தானத்தில் கரும் பாம்பு நின்றிருந்தால் ஜாதகனுக்கு ஏழு வயதில் பிதாவுக்குக் கர்ம முண்டென்பார்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சு ரா | | | |
| | | | |
| | | குரு | ல |

## (26) (ஆறு மிடம்.)

ஆறாமிடத்தில் பிதுர்க்காரகன் கரும் பாம்புடன் கூடி குடும்ப மேறிய சுக சப்தமாதிபனால் பார்க்கப்பட்டால் தந்தை வர்க்கம் நான்கில் தீர்க்கம் ஆண் ஏகம், இருபத்தொன்றில் தந்தைக்குக் கர்ம முண்டென்பார்.

## (39)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ச | | | |
| ல | | | சூ-பு சு |
| | | | |

எட்டா மிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம ரோக பாக்கிய கர்மாதிபதிகளுடன் கூடி சப்தமாதிபதியால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்கம் நான்கு. தனித்தனி பிரிந்திருப்பார்கள் பதினெட்டு வரையில் பிதுர் மாதர் தீர்க்கமென்பர்.

## (40)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| ல | | | சூ-பு |
| | | | சு |

எட்டா மிடத்தில் பிதுர்க்காரகன் ரோக பாக்கியாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் நீச்சனிருந்தால் தந்தையுடன் ஆண் மூன்று தந்தை பூமி தொழிலுள்ளவன் முப்பதில் பிதுர் மாதுர் பிரிதலாவரென்பர்.

## (41) (ஒன்பதாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| ல | | | |
| | | | சூ |

ஒன்பதா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று ஒருவரும் பாராம லிருந்தால் தந்தையுடன் ஆண்ஐந்து பெண்ணொன்று ஒருவன் ஞானி பிதா முப்பத்தொன்றில் மரணமாவனென்பர்.

## (42)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| ல | | | |
| | | | சூ-பு சு-ரா |

ஒன்பதா மிடத்தில் பிதுர்க்காரகன் பண்டிதன், சுக்கிரன், ராகு இவர்களுடன் கூடி யிருந்தால் தந்தை வர்க்கம் மூன்றில் ஒருவனுக்குப் புத்திரனில்லை தந்தை பாக்கிய முடையவனாயும், தர்மவானாயு மிருப்பனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| ல | | | |
| சனி | | | சூ |

## (43)

ஒன்பதா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று விரையமேறிய ஜென்ம குடும்பாதிபதியால் நோக்கப்பட்டால் தந்தை கெணித சாஸ்திரி சமயோகன் மேன்மையில்லையென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| ல | | | |
| | | | சூ-சு குருச |

## (44)

ஒன்பதா மிடத்தில் பிதுர்க்காரகனுடன் திருதிய பஞ்சம சப்தம கர்ம விரையாதிபதிகள் கூடியிருந்தால், தந்தை வர்க்கம் ஏழு, அஷ்டமாதிபன் திசை மத்தியில் ஜாதகன் ரோகத்தால் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| சு | | | |
| | | | |
| ல | | | |
| | | | சூ |

## (45)

ஒன்பதா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று உச்ச புகரால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தை தீர்க்கம், பிரதாபன், தனவான், சகல விஷய மறிபவன், புண்ணியவா னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| ல | | | |
| | | சூ-பு | |

## (46) (பத்தாமிடம்.)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் நீச்ச மடைந்து ரோக பாக்கியாதிபதியுடன் கூடி யிருந்தால் தந்தை வியாபாரி அநேக தேசங்கள் சுற்றுவான் ஜாதகனுக்கு இருபது வயதிற்கு பிதா மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | |
| | | | |
| ல | | | |
| | | சூ | |

(47)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாயிருந்து நான்காமிடமேறிய நீச்ச சனியால் பார்க்கப்பட்டால் பிதுர் வர்க்க நாசம் தந்தை பனிரண்டிற்குள் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | செ |
| ல | | | |
| | | சூ-பு | |

(48)

பத்தா மிடத்தில் பிதுர்க்காரகன் ரோக பாக்கியாதிபதியுடன் கூடி சப்தம கேந்திரம் பெற்ற நீச்ச குஜனால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தை ஏழை பூமிமூலம் உபாய ஜீவனம் செய்வனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | |
| | | | |
| ல | | | |
| | | சூ-பு சு | |

(49)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம ரோக பாக்கிய கர்மாதிபதிகளுடன் கூடி நீச்ச சனியால் பார்க்கப்பட்டால் தந்தையுடன் ஆணொன்று பெண்ணொன்று தந்தை இருபதுக்குள் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | |
| | | | செ |
| ல | | | |
| | | சூ | |

(50)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று உபைய நீச்சர்களால் பார்க்கப்பட்டால் தந்தை வர்க்கமெல்லா நாசம் தந்தை இளமையில் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | சனி |
| ல | | | |
| | சூ குரு | | |

## (51) (பதினொரா மிடம்.)

பதினொராமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய விரையாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தை சப்தம கேந்திரமேறிய ஜென்ம தனதிபதியால் நோக்கப்பட்டால் தந்தைவர்க்கம் ஆண் நான்கு பெண்ணொன்று ஜாதகன் பிறந்தாண்டில் பிதுர் ரோகம் குடும்ப பிரிவுண் டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| ல | | | |
| | சூ | | செ சு |

## (52)

பதினொரமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று பிதுர்ஸ்தானத்தில் சுக பஞ்சம கர்ம லாபாதிபதிகள் கூடி யிருந்தால்பிதா ஏகம் தர்மம்நடத்துகிறவனாயும், அரசர் தயவும் வாகன முதலிய மேன்மையுள்ளவனாயு மிருப்ப னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி | |
| | | | குரு |
| ல | | | |
| | சூ | | |

## (53)

பதினொராமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாயிருந்து பஞ்சம சப்தமஸ்தானத்திலிருக்கும் ஜென்ம தன திருதிய விரையாதிபதிகளால் பார்க்கப்பட் டிருந்தால் தந்தை வர்க்க மிருவர் பிதா பதினைந்தில் மரணமாவ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | ச | |
| | | | |
| ல | | | |
| | சூ-சு | | |

## (54)

பதினொராமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம கர்மாதிபதியுடன் கூடி உச்ச சந்திரனால் பார்க்கப்பட்டிருந்தால் பிதா உத்தியோகன் சமுத்திரக்கரையோரம் ஜெனனம் மாதமொன்றில் ஜாதகன் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | குரு |
| ல | | | |
| | சூ-பு | | சு |

## (55)

பதினொராமிடத்தில் பிதுர்க்காரகன் ரோக பாக்கியாதிபதியுடன் கூடி உச்ச குருவால் பார்க்கப்பட்டு பிதுர்ஸ்தானத்தில் நீச்சனிருந்தால் ஜாதகன் கெர்ப்பத்தில் பிதா கீழ்திசை குடிபோவான் பூமிதொழிலால் ஜீவனம் ஜாதகன் செத்துப் பிறப்பனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | ச |
| | | | |
| ல | | | |
| சூ | | | |

## (56) (பனிரண்டாமிடம்.)

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நட்புபெற்று சப்தமாதிபதியால் பார்க்கப்பட்டிருந்தால், தந்தைவர்க்கம் விர்த்தியில்லை தந்தை இருபத்தைந்தில் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | ச |
| | | | |
| ல | | | |
| சூ-ச | | | |

## (57)

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம கர்மாதிபதியுடன் கூடி சப்தமாதிபதியால் நோக்கப்பட் டிருந்தால் பிதுர்வர்க்கம் ஆணொன்று பெண்ணொன்று பிதா தீர்க்கம் மூன்றுவது கெர்ப்ப காலத்தில் தந்தை மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| சனி | | | செ |
| | | | |
| ல | | | |
| சூ-சு | | | |

## (58)

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம கர்மாதிபதியுடன் கூடி மூன்றாமிட மேறிய காரி குஜனிவர்களால் நோக்கப்பட் டிருந்தால் தந்தை வர்க்கம் ஆண் மூன்று தார மிரண்டு பதினொன்றில் தந்தை மரணமாவனென்பர்.

## (59)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| ல | | | |
| கு | | சனி | |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று உச்ச சனியால் பார்க்கப்பட்டால் தந்தை ஏகன் ஜாதகனுக்கு இருபத்து நான்கில் தந்தை மரணமாவனென்பர்.

## (60)

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| | | | |
| ல | | | |
| கு-ச | | | செ |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் சப்தமாதிபதியுடன் கூடி ரோகஸ்தானமேறிய லக்கின தனாதிபதியால் நோக்கப்பட்டு பிதுர்ஸ்தானத்தில் சுக லாபாதிபனேறியிருந்தால் ஜாதகனுக்கு நாற்பதில் பிதுர் மரணமாவனென்பர்.

## லக்கினம் 10-க்குக் கூடிய சக்கிரம் 600

மகரச்சூரியன் பலன்

முற்றிற்று.

உ

சிவமயம்.

# பார்வதிக்கு பரமசிவன் உபதேசித்த

# ஈஸ்வர நாடி சோதிடம்

## சூரியகாண்டம்.

---

| | | | |
|---|---|---|---|
| | | சனி | |
| ல-சூ செ | | | |
| | | | |
| | | | |

### (1) (கும்பச்சூரியன்.)

உதையத்தில் பிதுர்க்காரகன் திருதிய கர்மாதிபதியுடன் கூடி சுகஸ்தானமேறிய ஜன்ம விரையாதிபதியால் நோக்கப்பட்டால் பிதுர் ஏகன், ஜாதகன் அவயவங்கள் ஊனப்பட்டவனாயிருப்பன் தந்தை இளமையில் மரணமடைவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல-பு சூ | | | |
| | | | |
| சனி | | | |

### (2)

உதையத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி லாபஸ்தானமேறிய ஜென்ம விரையாதிபதியால் நோக்கப்பட்டால் பிதுர் ஏகன், பத்து வயதில் மரணமாவனென்பர்.

## (3)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல-சு | | | |
| | | | |
| குரு 4 | | | |

உதையத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் பகையடைந்து லாபஸ்தானத்தில் ஸ்வக்ஷேத்திர லாபாதிபதியுடன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடியிருந்தால் பிதா தேசம் சுற்றி ஜீவிப்பன், பதினைந்திற்குள் மரணமென்பர்.

## (4)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல-சு | | | |
| | | | |
| | | செ | |

உதையத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் ஒருவரும் பாராமல் பிதுர்ஸ்தானத்தில் திருதிய கர்மாதிபதியான நிலமகனேறியிருந்தால், பிதுர் சகோதரம் பதிமூன்றில் நிலைப்பு ஆணொன்று, பெண்ணொன்று, இருபதிற்குள் தந்தைக்குக் கர்மமுண்டென்பர்.

## (5)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல-சு குரு | | | |
| | | | |
| | | ச | |

உதையத்தில் பிதுர்க்காரகன் தனலாபாதிபதியுடன் கூடி ரோகாதிபதியான சந்திரன் பிதுர்ஸ்தானமேறியிருந்தால் தந்தை ஏகன்,இளமையில் மரணமென்பர்.

## (6) (இரண்டாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| சு கே | 4 | | |
| ல | | | |
| | | | |
| | | | |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் மோக்ஷகாரகனாகிய கேதுவுடன் கூடி பிதுர்ஸ்தானத்தை பஞ்சம அஷ்டமாதிபதியால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்கம் ஆணிரண்டு, பிதா ஆருண்டில் மரணமென்பர்.

## (7)

| | | | |
|---|---|---|---|
| சூ ரா | | | |
| ல | | | |
| சனி | | | |
| | குரு | | |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஞானகாரகனாகிய ராகுவுடன் கூடி ஒன்பதாமிடம் பற்றிய பிரகஸ்பதியை ஸ்வக்ஷேத்திரம்பெற்ற ஜென்ம விரையாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால், தந்தைவர்க்கம் பூமி செல்வமுடையவர்கள். ஏழு வயதில் பிதா மரணமடைவனென்பர்.

## (8)

| | | | |
|---|---|---|---|
| சூ செ | | | |
| ல | | | |
| | | | |
| | | | ச |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய கர்மாதிபதியுடன் கூடி ரோகாதிபதியால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தைவர்க்கம் ஆணிரண்டு தந்தை பத்தொன்பதில் மரணமாவனென்பர்.

## (9)

| | | | |
|---|---|---|---|
| சூ சு-பு | | | |
| ல | | | |
| | | | |
| | | | செ |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் உச்சநீசருடன் கூடி அஷ்டமஸ்தான மேறிய திருதிய கர்மாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால் தந்தை பூமிமூலம் ஜீவனம், இருபதிற்குமேல் மரணமென்பர்.

## (10)

| | | | |
|---|---|---|---|
| சூ குரு | | | |
| ல | | | |
| | | | |
| | | | பு |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் தன லாபாதிபதியுடன்கூடி மூலத்திரிகோணமேறிய பஞ்சம அஷ்டமாதிபதியால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தை பலவான், நியாயாதிபதி சுகவான், அநேக பூமிகளையுடையவனாயிருப்பனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சூ-பு | | |
| ல | | | |
| | | | |
| | | சனி | |

## (11) (மூன்றாமிடம்.)

மூன்றாமிடத்தில் பிதுர்க்காரகன் உச்சனாய் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி உச்சசனியால் பார்க்கப்பட்டால் கெர்ப்ப காலத்தில் பிதா மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சூ | | |
| ல | | | |
| | | | |
| | | குரு | |

## (12)

மூன்றாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாயிருந்து பிதுர்ஸ்தானமேறிய தனலாபாதிபதியால் பார்க்கப்பட்டிருந்தால் பிதா இருபத்திரண்டு வரையில் தீர்க்கம், பிதா மன்னர் மூலம் மேன்மையடைவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சூ-பு<br>செ | | |
| ல | | | |
| | | | |
| | | சனி | |

## (13)

மூன்றாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய பஞ்சம அஷ்டம கர்மாதிபதிகளுடன் கூடி பிதுர்ஸ்தானமேறிய உச்சசனியால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தைவர்க்கம் ஆண்ஐந்து, எல்லா மரணம், முப்பத்தாறில் பிதுர் கர்மமுண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சூ கே<br>குரு | | |
| சனி<br>ல | | | |
| | | | |
| | | | |

## (14)

மூன்றாமிடத்தில் பிதுர்க்காரகன் இறையவன் கேது இவர்களுடன் கூடி லக்கினாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால் பிதுர்வர்க்கம் மூன்று, மாதமொன்றில் தாயும் தந்தையு மரணமடைவார்களென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சு-பு கே | | |
| ல | | | |
| | | | |
| குரு | | சனி | |

## (15)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் புலவன் கேதுவுடன் கூடி உச்ச சனியாலும் லாபமேறிய ஸ்வக்ஷேத்திர குருவாலும் பார்க்கப்பட்டிருந்தால், பிதுர்வர்க்கம் ஐந்தில் தீர்க்கம், ஆணேகம், பெண்ணேகம், பிதா சுகவாசி யென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | சு குரு | |
| ல | | | |
| | | | |
| | ச | | |

## (16) (நான்காமிடம்.)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் தன லாபாதிபதியுடன் கூடி நீச்ச சந்திரனால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தை வர்க்கம் ஆண் ஏழு. பெண்ணொன்றில் தீர்க்கம் ஆறு. சப்தமாதிபன் புக்தியில் மாதுருவர்க்கக் கர்மமுண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| சனி | | சு-பு ச | |
| ல | | | |
| | | | |
| | | | |

## (17)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம ரோக அஷ்டமாதிபதியுடன் கூடி குடும்பமேறிய ஜென்ம விரையாதிபதியால் நோக்கப்பட்டால் ஜேஷ்ட பிதா பதினெட்டில் குலமாருவன். தந்தை இருபதிற்குள் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | சு-பு | |
| ல | | | |
| | | | |
| | செ | | |

## (18)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி தசம கேந்திரமேறிய ஸ்வ க்ஷேத்திர குஜனால் பார்க்கப்பட்டிருந்தால் ஜாதகன் ஊமையாவன். இருபத்தைந்திற்குள் தந்தை மரணமாவனென்பர்.

## (19)

| | | | |
|---|---|---|---|
| | | சூ-பு | |
| ல | | | |
| | | | |
| | | சனி | |

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் சனி யிருந்தால், பிதாவுடன் பெண்ணொன்று. பிதா நாளுக்குநாள் விர்த்தியாவ னென்பர்.

## (20)

| | | | |
|---|---|---|---|
| | சு | சூ-ச ரா-பு | |
| ல | | | |
| | | | |
| | | | |

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் சந்திரன், புதன், ராகு இவர்களுடன் கூடி பிதுர்ஸ்தானத்தை வீரியமேறிய சுக பாக்கியாதிபதியால் நோக்கப்பட்டால் பிதாவுடன் பெண்ணொன்று. பிதா சன்மார்க்கனும் பூமி தொழிலுள்ளவனுயு மிருப்ப னென்பர்.

## (21) (ஐந்தாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | செ | | சூ-பு கே |
| ல | | | |
| | | | |
| | | | |

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதி, கேது, இவர்களுடன் கூடி பிதுர்ஸ்தானத்தை ஸ்வக்ஷேத்திர பூமகனால் நேரே பார்க்கப்பட்டிருந்தால் தந்தை வர்க்கம் ஆண் மூன்று. பெண்ணிரண்டு சப்தமாதிபன் திசையில் விவகாரம், பொருள் நஷ்டம், சோர பயம், அபஜெய முதலியபலன்க ளுண்டா மென்பர்.

## (22)

| | | | |
|---|---|---|---|
| | செ | | சூ-பு |
| ல | | | |
| | | | |
| | | குரு | |

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானமேறிய பிரகஸ்பதியை ஸ்வ க்ஷேத்திர அங்காரகனால் நேரே பார்க்கப்பட்டிருந்தால் தந்தை வர்க்கம் ஆண் தசமம். பெண் உபையம். தந்தை பதினேந்தில் மரணமாவ னென்பர்.

## (23)

| | | | |
|---|---|---|---|
| | | | சு-பு |
| ல | | | |
| | | | |
| | | குரு | |

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் தன லாபாதிப னேறியிருந்தால் பனிரண்டு வயதில் தந்தை எமநகர் சேருவனென்பர்.

## (24)

| | | | |
|---|---|---|---|
| | | | சு-ச ரா |
| ல | | | |
| | | | |
| | | | சனி |

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் சந்திரன் ராகுவுடன் கூடி ஆயுர்ஸ்தானமேறிய ஜென்ம விரையாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால் தந்தை வர்க்க மூன்று. தந்தை அதிகாரமுடையவனாய் பதினொன்றில் மாணமாவனென்பர்.

## (25)

| | | | |
|---|---|---|---|
| | | | சு |
| ல | | | |
| | | | |
| சனி | | | |

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று லாபஸ்தானமேறிய ஜென்ம விரையாதிபதியின் பார்வை பெற்றிருந்தால் தந்தைவர்க்கம் ஆண் மூன்று. பெண்ணொன்று, தந்தை ஆலய சொத்தால் விர்த்தியாவன். பதினெட்டில் பிதா மரணமென்பர்.

## (26) (ஆறுமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | செ | | |
| ல | | | சு |
| | | | |
| | | | |

ஆறுமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் பகையடைந்து பிதுர்ஸ்தானத்தை திருதியமேறிய வீரிய கர்மாதிபதியால் நோக்கப்பட்டால் தந்தையுடன் ஆணிரண்டு, பெண்ணேக மென்பர்.

## (27)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | சூ-பு |
| | | | |
| | | குரு | |

ஆருமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் தன லாபாதிபனேறியிருந்தால் பிதுர் சகோதரம் ஆண் ஆறு, பெண்ணிரண்டு, தந்தை சுவீகார புத்திரன் தீர்க்கமுள்ளவனென்பர்.

## (28)

| | | | |
|---|---|---|---|
| | | சு | |
| ல | | | சூ-பு |
| | | | |
| | | | |

ஆருமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானாதிபதி சுக கேந்திரத்தில் ஸ்வக்ஷேத்திரனாயிருந்தால் தந்தை சகோதரம் நான்கில் ஒருவன் புத்திரதோஷமுள்ளவனாயிருப்பனென்பர்.

## (29)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | சூ-சனி சு-ரா |
| | | | |
| | | செ | |

ஆருமிடத்தில் பிதுர்க்காரகனுடன் சுக்கிரன், சனி, ராகு இவர்கள் கூடி பிதுர்ஸ்தானத்தில் திருதிய கர்மாதிபனேறியிருந்தால் தந்தை ஏகன். வித்தையினால் ஜீவனார்த்தம் செய்வனென்பர்.

## (30)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | சூ-பு சு |
| | | | |
| | | குரு | |

ஆருமிடத்தில் பிதுர்க்காரகனுடன் சுக, பஞ்சம, அஷ்டம, பாக்கியாதிபதிகள் கூடி பிதுர்ஸ்தானத்தில் தன லாபாதிபனேறியிருந்தால் தந்தையுடன் ஆண் மூன்று, தந்தை பூமி மூலம் ஜீவிப்பனென்பர்.

## (31) (ஏழாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | குரு | | சனி |
| ல | | | |
| | | | சூ |
| | | | |

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் ஸ்வக்ஷேத்திரம் பெற்று திருதிய பஞ்சமஸ்தானங்களேறிய குரு சனி இவர்களின் திருஷ்டியடைந்திருந்தால் தந்தைவர்க்கம் ஆணிரண்டு, ஏழு வயதில் தந்தைக்குக் கர்மமென்பர்.

## (32)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| | | | சூ-பு<br>கே |
| | சனி | செ | |

ஏழா மிடத்தில் பிதுர்க்காரகனுடன் புதன், சிகி கூடி கர்மமேறிய சனியால் பார்க்கப்பட்டு பாக்கியஸ்தானத்தில் திருதிய கர்மாதிபதி ஏறி யிருந்தால் பதினைந் தாண்டிற்குமேல் தந்தை மரணமாவனென்பர்.

## (33)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல-ச | | | |
| | | | சூ-பு<br>சனி |
| | | | |

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் லக்கின பஞ்சம அஷ்டம விரயாதிபதிகளுடன் கூடி லக்கின கேந்திரம் பெற்ற ரோகாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால் தந்தைவர்க்கம் ஆணிரண்டு, தந்தை பத்து வயதில் மரணமாவனென்பர்.

## (34)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல-ச | | | |
| | | | சூ<br>சனி |
| | | | |

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் ஜென்ம விரயாதிபதியுடன் கூடி லக்கின கேந்திரமேறிய ரோகாதிபதியால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தை ஏகன், ஜாதகனுக்கு ஐந்துவயதில் பிதாமரணமடைவனென்பர்

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| | | | சூ-பு |
| | | | |

## (35)

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி ஒருவர் பார்வையுமில்லாதிருந்தால் தந்தை வர்க்கம் ஆணிரண்டு, ஜாதகன் பிறந்தன்று அதிக மழையினால் தாய்க்கு ரோகமுண்டாய் நிவர்த்தியென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| | | | |
| | | சு | சூ-பு |

## (36) (எட்டாமிடம்.)

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் பிதுர்ஸ்தானத்தில் பிதுர்ஸ்தானாதிபன் மூலத்திரிகோணம் பெற்றிருந்தால் பின் சகோதர முண்டான பிறகு பிதா மரணமடைவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | சனி |
| | | | |
| | | குரு | சூ-பு சு |

## (37)

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் உச்ச நீசருடன் கூடி ஆறுமிடமேறிய காரியின் திருஷ்டியடைந்து பிதுர்ஸ்தானத்தில் தனலாபாதிபதி ஏறியிருந்தால் தந்தைக்குத் தாரமிரண்டு. இளமையில் தந்தைக் கரிட்டமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| | | | |
| | | சு-பு கே | சூ குரு |

## (38)

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் தனலாபாதிபதியுடன் கூடி நவ திரிகோணத்தில் பிதுர்ஸ்தானாதிபதியுடன் புதன் கேது கூடியிருந்தால் தந்தையுடன் ஆண் மூன்று, நான்கு வயதிற்குள் பிதாவுக் கரிட்டமென்பர்.

## (39)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | சனி |
| | | | |
| | | | சூ ரா |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகனுடன் கரும்பாம்பு கூடி சத்துருஸ்தான மேறிய ஜென்ம வியாதிபதியால் பார்க்கப்பட்டிருந்தால் ஜாதகனுக்குப் பதினான்கில் தந்தைக்குக் கெண்ட மென்பர்.

## (40)

| | | | |
|---|---|---|---|
| | ச | | |
| ல | | | |
| | | | |
| | | செ | சூ குரு |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் தனலாபாதிபதியுடன் கூடி பிதுர் ஸ்தான மேறிய திருதிய கர்மாதிபதியை ரோகாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால், தந்தை சமயோகன் பூமிமூலம் ஜீவனம் பிதா தனிகுட்டைய னென்பர்.

## (41) (ஒன்பதாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| ல | | | |
| | | | |
| | | சூ | |

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நீச்சமடைந்து திருதிய மேறிய தனலாபாதிபதியால் பார்க்கப்பட்டிருந்தால் ஜெனன காலமுதல் பிதாவுக்கு நலமீயாக முண்டாம் பனிரண்டில் ஜாதகன் மரணமடைவ னென்பர்.

## (42)

| | | | |
|---|---|---|---|
| | சனி | | |
| ல | | | செ |
| | | | |
| | | சூ-சு கு-பு | |

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகனுடன் மேதை சிகண்டிசன் கவி இவர்கள் கூடி உபய நீச்சர்களின் பார்வை யுண்டாயிருந்தால் தந்தைவர்க்க மூன்றில் ஒருவன் ஜலயாத்திரையில் மரணம். மற்றவன் ஞானி பிதா கர்மியாயும் உதவியில்லாதவனுமாயு மிருப்பனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| | | | |
| | | சூ-ரா ச | |

## (43)

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் நீச்சனாய் சந்திரன் ராகுவுடன் கூடி யிருந்தால் தந்தை வர்க்கம், விர்த்தினாசம் பிதாவே விர்த்தி சப்தமாதிபன் திசையில் மாதுருவுக் கரிட்டமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| சு | | | |
| ல | | | செ |
| | | | |
| | | சூ | |

## (44)

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நீச்ச பௌமன் திருஷ்டி யடைந்து பிதுர்ஸ்தானாதிபதி குடும்பத்தில் உச்சனாயிருந்தால் பிதா சுகவான் பெரிய குடும்பன் கிருஷி மூலம் ஜீவிப்பனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | சு |
| | | | |
| | | சூ-ச | |

## (45)

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் ரோகாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானாதிபதியான சுக்கிரன் ரோகஸ்தானமேறி யிருந்தால் தந்தை அல்ப்ப ஜீவனம் ரோகத்தால் துன்பபடுவன், ஜாதகன் ஜெனன காலம் தந்தைக்கரிட்ட மென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | குரு | |
| ல | | | |
| | | | |
| | சூ-பு | | |

## (46) (பத்தாமிடம்.)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி சுக கேந்திரமேறிய தன லாபாதிபதியால் பார்க்கப்பட்டால் ஜெனித்த ஏழு திங்களில் குடும்பத்தில் கர்மம் பிதாவின் பிதாவுக்கு ரோகம் ஜாதகன் மரணமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| | | | |
| | சூ-பு சனி | குரு | |

## (47)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் லக்கின பஞ்சம அஷ்டம விரையாதிபதிகளுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் குரு விருந்தால், ஜாதகனுக்கு பனிரண்டில் தந்தை மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| குரு | | | |
| ல | | | |
| சனி | | | |
| | சூ-பு | | |

## (48)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி தன லாபாதிபதியின் ஒன்பதாம் பார்வைபெற்று பிதுர்ஸ்தானத்தை சனி பத்தாம் பார்வை பார்க்குமாகில் தந்தை வர்க்கம் ஆண் நான்கு, ஜாதகன் வாரத்தில் மரணமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| | | | |
| | சூ-பு | சு கே | |

## (49)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி பாக்கியத்தில் பிதுர்ஸ்தானாதிபதியுடன் கேது கூடியிருந்தால் பிதுர் சகோதரமிரண்டு ஜாதகன் பிறந்தவுடன் தந்தைக் கரிட்டமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சு | | |
| ல | | | |
| | | | |
| | சூ-பு | | |

## (50)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன்கூடி பிதுர்ஸ்தானத்தை ரோகாதிபதியால் நோக்கப்பட்டால் தந்தைவர்க்கம் மூன்றில் இரண்டு தீர்க்கம் ஜெனனகாலம் பிதுர்வர்க்கம் சுபமுண்டென்பர்.

## (51) (பதினோராமிடம்)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| | | | |
| கு-பு | | ச | |

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி பிதுர் ஸ்தானத்தில் சந்திரனிருந்தால் தந்தைக்கு தாரமூன்று, பின்னால் பிதா நிந்திக்கப்படுவன் மாதம் பத்தில் ஜாதகன் மரணமென்பர்.

## (52)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| | | | |
| கு-ச | | | |

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் ரோகாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தை யொருவரும் பாராதிருந்தால் பிதா ஏகம், வித்தை யுண்டாம் மத்திய காலத்தில் ரோக பீடிதமுண்டாய் நிவர்த்தி பூமி மூலம் சமயோக முண்டென்பர்.

## (53)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| | | | சனி |
| கு | | | |

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாயிருந்து பிதுர்ஸ்தானத்தை சனி தசமகேந்திரமேறி பார்க்கப்பட்டால் பிதா ஏகம், வியாபார மூலம், ஜீவனம் விர்த்தியில்லை யென்பர்.

## (54)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| சனி | | | |
| கு | | | |

பதினோராமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனா யொருவர் திருஷ்டியும் பெறாமலிருந்து பிதுர்ஸ்தானத்தை ஸ்வக்ஷேத்திர ஜென்ம விரையாதிபதியால்பார்க்கப் பட்டால் தந்தையுடன் ஆணிரண்டு விரையாதிபன் திசையுமானால் ஜாதகன் வாரத்தில் மரணமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| ல | | | |
| | | | |
| சூ-ச | | | |

## (55)

பதினொராமிடத்தில் பிதுர்க்காரகன் ரோகாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தை திருதியமேறிய தன லாபாதிபதியால் பார்க்கப்பட்டால் தந்தை வர்க்கம் ஆணிண்டு, பத்து வயதிற்குள் தந்தை மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| ல | | | |
| சூ-பு | | | |
| | | சனி | |

## (56) (பனிரண்டாமிடம்.)

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் டையடைந்து பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி பாக்கியத்தி லிருக்கும் நீச்ச கோளை தன லாபாதிபதியால் நேரே பார்க்கப்பட்டால் பிதாவுடன் ஆண் மூன்று, பெண்ணிரண்டு, தந்தை வித்தைமூலம் ஜீவன மென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | சனி ச | | |
| ல | | | |
| சூ | | | |
| | | | |

## (57)

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாயிருந்து பிதுர்ஸ்தானத்தை மூன்றுமிட மேறிய ஜென்ம ரோக விரையாதிபதிகளால் நோக்கப்பட்டிருந்தால் பனிரண்டு வயதில் பிதா அரிட்டமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| | ரா-ச | | |
| ல | | | |
| சூ-பு கு-சு | | | |
| | | | |

## (58)

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் இரண்டு, நான்கு, ஐந்து, எட்டு, ஒன்பது, பதினொன்று இந்த வீட்டுக் குடையவர்களுடன் கூடி பிதுர்ஸ்தானத்தை சந்திரன் ராகுவால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தைவர்க்க மூன்று. பதினெட்டில் பிதுர்கர்ம மென்பர்.

## (59)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | ச |
| சூ-பு | | | |
| | | | |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் பஞ்சம அஷ்டமாதிபதியுடன் கூடி ஸ்வக்ஷேத்திர சப்தமாதிபதியால் நோக்கப்பட்டால் தந்தை ஏகன் பூமி மூலம் ஜீவனமென்பர்.

## (60)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | | | |
| சூ-சு | | | |
| | | சனி | |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் சுக கர்மாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் உச்சனிருந்தால் பிதா சஞ்சலன், பிரதாபன், ஜாதகனுக்கு இருபத்தைந்திற்குமேல் பிதா மரணமடைவனென்பர்.

## லக்கினம் 11-க்குக் கூடிய சக்கிரம் 660

கும்பச்சூரியன் பலன்

முற்றிற்று.

உ

சிவமயம்.

# பார்வதிக்கி பரமசிவன்

# உபதேசித்த

# ஈஸ்வர நாடி சோதிடம்.

## சூரியகாண்டம்

(:)

| | | | |
|---|---|---|---|
| ல-சு | | | செ |
| | | | |
| | | | |
| குரு | | | |

### (1) (மீனசூரியன்.)

உதையத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நட்புபெற்று சுக கேந்திரமேறிய பிதுர்ஸ்தானாதிபதியை ஸ்வக்ஷேத்திர ஜென்ம கர்மாதிபதியால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தையுடன் ஆண் நான்கு, பெண்ணொன்று. தந்தை இருபத்தொன்பதில் மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல-பு சு | | | |
| செ | | | |
| | | | |
| | | | |

### (2)

உதையத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி ஒன்பதாமாதிபதியான குஜன் பனிரண்டாமிடமேறியிருந்தால் தந்தை ஏகன். ஜாதகனுக்கு ஐம்பதில் தந்தை மரணமாவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல-சூ ரா | | | |
| | | | |
| | | | |
| | | | ச |

## (3)

உதையத்தில் பிதுர்க்காரகன் ஞானகாரகனுடன் கூடி சப்தம கேந்திரமேறிய பஞ்சமாதிபதியால் பார்க்கப்பட்டால் தந்தைவர்க்க மூன்றில் தந்தையே விர்த்தி தந்தைக்குக் களத்திர மிரண்டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல-பு சூ-சு | | | |
| | | | |
| | | | செ |
| | | | |

## (4)

உதையத்தில் பிதுர்க்காரகன் திருதிய சுக சப்தம அஷ்டமாதிபதிகளுடன் கூடி ரோகமேறிய தன பாக்கியாதியால் பார்க்கப்பட்டால் ஜாதகன் பிறந்த இரண்டு மாசத்தில் தந்தை குடும்பம்விட்டு தேசாந்திரம்போவ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| சூ-ல சு | | | |
| | | | |
| | | | |
| | ச | | |

## (5)

உதையத்தில் பிதுர்க்காரகன் திருதிய அஷ்டமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் பஞ்சமாதிபதி நீச்சனு யிருந்தால் ஜாதகன் பிதுர், மாதுர், கர்மம், அன்னிய கர்மம் செய்வ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | சூ | | |
| | | | |
| | | | |
| | | சனி | |

## (6) (இரண்டாமிடம்.)

இரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனுய் உச்சம் பெற்று, உச்ச லாப விரையாதிபதியால் பார்க்கப் பட்டால் தந்தையுடன் ஆண் மூன்று, பெண்ணிரண்டு, தந்தைக்குத் தார மிரண்டென்பர்.

**(7)**

| | | | |
|---|---|---|---|
| ல | சூ-பு | செ குரு | |
| | | | |
| | | | |
| | | | |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தை ஆரல், ஆசான் சேர்ந்து பார்த்தால் தந்தை எட்டு வயதில் மரணமாவனென்பர்.

**(8)**

| | | | |
|---|---|---|---|
| ல | சூ-சு கே | செ | |
| | | | |
| | | | |
| | | | |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக்கிரன் கேதுவுடன் கூடி பிதுர்ஸ்தானாதிபதியான குஜன் மூன்றுமிடமேறியிருந்தால் தந்தைவர்க்க மூவரிலொருவன் அன்னியதேச மாரலாவனென்பர்.

**(9)**

| | | | |
|---|---|---|---|
| ல | சூ-பு செ | | |
| | | | |
| | | | |
| | கே | | |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் தன, சுக, சப்தம பாக்கியாதிபதிகளுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் கேது யிருந்தால் தந்தை ஜாதகனுக்கு பதினேந்தில் மரணம். பிதாவால் கட்டிய மனைகட்டட மூண்டென்பர்.

**(10)**

| | | | |
|---|---|---|---|
| ல | சூ | | |
| | | | குரு |
| | | | |
| | செ | | |

இரண்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனுயிருந்து பாக்கியத்திலிருக்கும் பிதுர்ஸ்தானாதிபதியை உச்ச குருவால் பார்க்கப்பட்டிருந்தால் பிதா தனவான், தீர்க்காயுள் அனேக பூமிகளுடையவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | சூ-பு ரா | |
| | | | |
| | | | |
| | | | |

## (11) (மூன்றுமிடம்.)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் புந்தி, ராகுவுடன் கூடியிருந்தால் தந்தை சகோதரம் ஆணிரண்டு, பெண்ணொன்று, கனிட்ட பிதா விர்த்தியில்லை ஜாதகன் பிறந்த நான்கு வயது வரையில் உத்தியோக நஷ்டம். இருபத்தெட்டில் பிதுர் கர்மமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | சூ | |
| | | | |
| | | | சனி |
| | ச | | |

## (12)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று, ஆறிலிருக்கும் லாப விரையாதிபதியால் பார்க்கப்பட்டு பிதுர்ஸ்தானத்தில் பஞ்சமாதிபன் நீச்ச மடைந்தால் தந்தையுடன் ஆணிரண்டு, பெண்ணிரண்டு, நாற்பது நாளில் பிதுர் கர்மமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | சூ-பு செ | |
| | | | |
| | | | |
| | | | |

## (13)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் தன் சுக சப்தம பாக்கியாதிபதிகளுடன் கூடியிருந்தால் தந்தைவர்க்க மூன்றிலொருவன் ஜல யாத்திரையில் மரணம். பிதா வேதாந்தி. தீர்த்தயாத்திரை யுடையவனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | சூ-பு | |
| | | | செ |
| | | | |
| | | | |

## (14)

மூன்றுமிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானாதிபதி நீச்ச மடைந்திருந்தால் தந்தை வர்க்கம் ஆண் மூன்றில் தந்தை ஞானியாயும், சோதிட சாஸ்திரியாயும், யோகவானாயும், தீர்க்கவானாயு மிருப்பனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | கு-பு | |
| | | | |
| | | | |
| | | | செ ரா |

## (15)

மூன்றாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானாதிபதியான குஜன் ஞானகாரகனுடன் சப்தம கேந்திரம்பெற்றிருந்தால் தந்தை ஏகன் வர்த்தக மூலம் உபாய ஜீவனம் செய்வனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | கு |
| | | | |
| | | | செ |
| | சனி | | |

## (16) (நான்காமிடம்.)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாயிருந்து பிதுர்ஸ்தானம் பற்றிய லாப விரையாதிபதியை ரோகஸ்தானமேறிய தன பாக்கியாதிபதியால் நோக்கப்பட்டால் தந்தையுடன் பெண்ணேகம், தீர்க்கமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | கு-பு சு |
| | | | |
| | | | |
| | | | சனி |

## (17)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய சுக சப்தம அஷ்டமாதிபதிகளுடன் கூடி களத்திரஸ்தானமேறிய லாப விரையாதிபதியால் நோக்கப்பட் டிருந்தால் தந்தையுடன் ஆண் நான்கு, பெண்ணொன்று, ஜாதகன் வருடமூன்றில் மரணமென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | கு-பு |
| | | | |
| | | | |
| | ச | | |

## (18)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் நீச்சனிருந்தால் ஜாதகன் பிறந்த பின்பு பிதுர், மாதுர் விரோதமுண்டாகி அம்மான் வீட்டில் வளர்வனென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | கு-பு சு |
| | | | |
| | | | |
| | சனி ச | | |

## (19)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகன் புதன் சுக்கிரனுடன் கூடி பிதுர்ஸ்தான மேறிய பஞ்சம, லாப விரையாதிபதிகளால் நோக்கப்பட் டிருந்தால் தந்தையுடன் பெண்ணிரண்டு, விர்த்தி யில்லை. முப்பதுக்கு மேல் பிதுர் கண்டம். ரோகாதிபன் திசையில் ஜாதகன் பரதேசியாவ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | கு-பு சு-ச |
| | | | |
| | | | செ |
| | | | |

## (20)

நான்காமிடத்தில் பிதுர்க்காரகனுடன் சந்திரன் புதன் சுக்கிரனிவர் மூவர்கூடி பிதுர்ஸ்தானத்தை சத்துருஸ்தானமேறிய தன பாக்கியாதியால் நோக்கப் பட்டால் தந்தையுடன் ஆண் மூன்று, பெண்ணொன்று. இருபத்திரண்டில் பிதுர்கர்மம் பிதுர்கள் தேசமாறி ஜீவிப்ப ரென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | கு-பு |
| | | | |
| | குரு ரா | | |

## (21) (ஐந்தாமிடம்.)

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி ஜென்ம கர்மாதிபதியான குரு ராகுவுடன் பிதுர்ஸ்தான மேறியிருந்தால் தந்தைவர்க்கம் ஆணிரண்டு ஜெனன காலம் கஷ்டம். பிதா மறைபடுவ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | செ | |
| | | | கு-சு ச |
| | | | |
| | | | |

## (22)

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய பஞ்சம அஷ்டமாதிபதிகளுடன் கூடி பாக்கியமேறிய இரவி புதல்வனை தன பாக்கியாதிபதியால் நேரே பார்க்கப்பட் டிருந்தால் தந்தைக்குத் தார மிரண்டு. இளமையில் மரண மென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | சூ மிச |
| | | | |
| | | | |

## (23)

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் நீச்சனுடன் கூடியிருந்தால் தந்தை வர்க்கம் நிலைப்பு ஆணிரண்டு வர்க்கம் செல்வ முண்டாம் தந்தைக்கு சிரசில் ரோகம் புத்திர தோஷமுண் டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | சூ ரா |
| | | | |
| | | | செ-சு குரு |

## (24)

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் ஞானகாரகனுடன் கூடி பிதுர்ஸ்தானாதிபதியான குஜன் சப்தமகேந்திரத்தில் உபைய மந்திரிசனுடன் கூடியிருந்தால் தந்தை எகம், பூமி, செல்வம், பலமான கட்டட முண்டாம் ஜாதகனுக்குப் பதினொன்றில் பிதுர்கர்ம மென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | குரு | |
| | | | சூ |
| சனி | | | |
| | செ ச | | |

## (25)

ஐந்தாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனயிருந்து லாபாதிபதியால் பார்க்கப்பட்டு பாக்கியத்தில் பிதுர்ஸ்தானாதிபன் நீச்சனுடன் கூடி மூன்றிலிருக்கும் ஜென்ம கர்மாதிபதியால் நோக்கப்பட் டிருந்தால் தந்தைவர்க்க மிருவர் பிதா கைத்தொழில் மூலம் உபாய ஜீவனம் செய்வ னென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | குரு |
| | | | சூ |
| | | | |

## (26) (ஆறுமிடம்.)

ஆறுமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் ஸ்வக்ஷேத்திரம்பெற்று பிதுர்ஸ்தானத்தை பஞ்சம திரிகோண மேறிய உச்சனால் பார்க்கப்பட்டால் பிதாவுடன் பெண்ணொன்று. பிதா முப்பத்துநான்கில் அரிட்டமாவ னென்பர்.

## (27)

| | | | |
|---|---|---|---|
| ல | | சனி | |
| | | | |
| | | | சூ-பு |
| | | | |

ஆருமிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தை திருதிய மேறிய லாப விரையாதிபதியால் நோக்கப் பட்டால் தந்தையுடன் ஆஞுறு, கைத்தொழில் விர்த்தி, இருபத்திரண்டு வரையில் பிதுர் மாதுரு தீர்க்க மென்பர்.

## (28)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| | | | சூ-பு கே |
| | சனி | | |

ஆருமிடத்தில் பிதுர்க்காரகன் புதன் கேதுவுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் லாப விரையாதிப னேறியிருந்தால் பிதா வர்க்கம் ஆண்மூன்று முப்பத்துமூன்றில் பிதுர் கண்டம் அடுத்து மாதுருகர்மம் அப்பால் கஷ்டபல னென்பர்.

## (29)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | செ சு |
| குரு | | | சூ |
| | | | |

ஆருமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் தனித்து ஒன்பதாமாதி சுக்கிரனுடன் பஞ்சம திரிகோணமேறி நீச்ச குருவால் பார்க்கப்பட் டிருந்தால் பிதா ஏகன், மேலான யோக மடைவ னென்பர்.

## (30)

| | | | |
|---|---|---|---|
| ல | | குரு | |
| | | | |
| | | | சூ பு ச |
| | சனி கே | | |

ஆருமிடத்தில் பிதுர்க்காரகன் சுக பஞ்சம சப்தமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் லாப விரையாதிபதியுடன் கேது கூடியிருந்தால் தந்தைவர்க்க மிருவர் தீர்க்கம். வியாபாரம். பூமிமூலம் ஜீவனம் இருபத்தாறு வரையில் பிதா தீர்க்க மென்பர்.

## (31) (ஏழாமிடம்)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| | | | |
| | ச | | சூ-சு |

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் நீச்சனுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் பஞ்சமாதிபதியான சந்திரன் நீச்சமடைந்திருந்தால் ஜாதகன் ஜெனித்த மூன்றுதிங்கள்முதல் தந்தைக்குஉத்தியோக மேன்மையுண்டென்பர்.

## (32)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| | | | |
| | ச | | சூ-சு ரா |

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக்கிரன் ராகு இவர்களுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் நீச்சனிருந்தால் தந்தை வர்க்க மூன்று, பதினெட்டில் பிரிவுபடும், இருபத்தைந்தில் பிதுர் மரணமென்பர்.

## (33)

| | | | |
|---|---|---|---|
| சனி ல-கு | | | |
| | | | |
| | | | |
| | | | சூ |

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று லக்கின கேந்திரம் பெற்ற ஜென்ம கர்ம லாப விரையாதிபதிகளால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தைவர்க்க மூன்றிலொருவன் மத்தியில் மரணம். தந்தை சில நாள் சுகமும் பின்னால் துன்பமும் படுவனென்பர்.

## (34)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| | | | |
| | | | சூ-சு கேச |

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் சந்திரன் சுக்கிரன் கேது இவர்களுடன் கூடியிருந்தால் தந்தைவர்க்கம் ஆண்ஐந்து பெண் எட்டில்தீர்க்கம் ஆணிரண்டு பெண்ணான்கு எட்டுவயதில் பிதாவுக்குக் கர்மமென்பர்.

## (35)

| | | | |
|---|---|---|---|
| ல | | ச | |
| | | | |
| | | | |
| | | | சூ-பு |

ஏழாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தை உச்ச சந்திரனால் பார்க்கப்பட்டால் முப்பதுவரையில் தந்தைக்கு தீர்க்க மென்பர்

## (36) (எட்டாமிடம்)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | செ |
| | | | |
| | ச-பு | சூ சனி | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் நீச்சனாய் சனியுடன் கூடி நீச்ச செவ்வாயால் பார்க்கப்பட்டு பிதுர்ஸ்தானத்தில் சுக பஞ்சம சப்தமாதிபர்களேறியிருந்தால் பிதா இருவர் அன்னியதேச மரண மென்பர்.

## (37)

| | | | |
|---|---|---|---|
| ல | குரு | | |
| | | | |
| | | | |
| | | சூ-பு ரா | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் புதன் கரும்பாம்பு இவர்களுடன் கூடி குடும்பமேறிய ஜென்ம கர்மாதிபதியால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்கம் எட்டு நிலைப்பு மூன்று இருபதில் பிதுர் கர்மமென்பர்.

## (38)

| | | | |
|---|---|---|---|
| ல | | சனி | |
| | | | |
| | | | |
| | பு கே | சூ | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று சுக சப்தமாதிபதியான புதன் கேதுவுடன் பிதுர்ஸ்தானமேறி லாப விரையாதிபதியால் நேரே பார்க்கப்பட்டிருந்தால் தந்தைக்குத் தாரமிரண்டு தந்தை இருபத்திரண்டில் மரண மென்பர்.

## (39)

| | | | |
|---|---|---|---|
| ல | | | குரு |
| | | | |
| | | | |
| | | சூ ரா செ | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் செவ்வாய் ராகு இவர்களுடன் கூடி கிரகஸ்தான மேறிய ஜென்ம கர்மாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால் தந்தை ஏகன். கிருஷி மூலம் ஜீவிப்ப னென்பர்.

## (40)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| குரு | | | |
| | | | |
| | | சூ-பு | |

எட்டாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி விரையஸ்தான மேறிய ஜென்ம கர்மாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால் தந்தை ஏகம். தேச சஞ்சாரி பிதுர் வர்க்கம் விர்த்தி யில்லை யென்பர்.

## (41) (ஒன்பதாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| | | | |
| | சூ-பு | சனி | |

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி புத்திரஸ்தானத்தை சனி பத்தாம் பார்வை பார்க்கப்பட்டிருந்தால் தந்தை வர்க்கம் ஆண் நான்கு, பிதா அரசாங்கத்தை யடுத்தவனாய் காரியசித்தியை விரும்புவ னென்பர்.

## (42)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| | | | செ |
| | சூ-பு | | |

ஒன்பதாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி ரோகஸ்தான மேறிய தன பாக்கியாதிபதியால் பார்க்கப்பட்டிருந்தால் பதினொன்றில் பிதுர் மாணம். ஜாதகனுக்கு ஆருதிபன் திசையில் விசேஷ யோகபல னுண்டென்பர்.

## (43)

| | | | |
|---|---|---|---|
| ல | செ | | |
| | | | |
| | | | |
| | கு-சு | | |

ஒன்பதா மிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய அஷ்டமாதிபதியுடன் கூடி பாக்கியாதிபதி இரண்டிலிருந்து பானு திசையில் பிறந்தால் ஜாதகன் மூன்றும்நா ளரிட்டமாவ னென்பர்.

## (44)

| | | | |
|---|---|---|---|
| ல | | ச | |
| | | | |
| | | | |
| | கு-பு சு | | |

ஒன்பதா மிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய சுக சப்தம அஷ்டமாதிபதிகளுடன் கூடி உச்ச பஞ்சமாதிபதியால் நோக்கப்பட்டிருந்தால் தந்தை பூமி மூலம் ஜீவனம் செய்வ னென்பர்.

## (45)

| | | | |
|---|---|---|---|
| ல | | ச | |
| | | | |
| | | | |
| | கு-சு | | |

ஒன்பதா மிடத்தில் பிதுர்க்காரகன் திருதிய அஷ்டமாதிபதியுடன் கூடி உச்ச சந்திரனால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தை ஏகன். அம்மான் வீட்டை யடுத்திருப்பன் அல்ப்ப ஜீவன மென்பர்.

## (46) (பத்தாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | குரு |
| | | | |
| கு-பு | செ | சனி | |

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி உச்ச சனி திருஷ்டிபெற்று பாக்கியத்தி லிருக்கும் பிதுர்ஸ்தானாதிபதியை உச்சகுருவால் நோக்கப்பட்டால் தந்தை வர்க்கம் ஆண் மூன்று, பெண்ணிரண் டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| | | | |
| ஆ-பு சு | ச செ | | |

## (47)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் புதன் சுக்கிரனுடன் கூடி பாக்கியத்தில் பிதுர்ஸ்தானாதிபன் பஞ்சமாதிபதியுடன்சேர்ந்திருந்தால் தந்தை வர்க்கம் ஆணிரண்டு தந்தைக்குத் தார மிரண் டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| | | | |
| சூரா | பு | | |

## (48)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் கரும்பாம்புடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் சுக சப்தமாதிப னேறியிருந்தால் தந்தை வர்க்கம் நான்குபேரும் பெருத்த அதிகாரம் செல்வ முடையவர்களா யிருப்பரென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | பு |
| | | | |
| | | | |
| சூ | | | |

## (49)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று சுக கேந்திர மேறிய ஸ்வக்ஷேத்திரமதிமகனால் பார்க்கப்பட் டிருந்தால் தந்தை வர்க்கம் செல்வ முள்ளவர்கள், தந்தைக்கு தீர்க்காயுளுண் டென்பர்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| | | | |
| குரு சூ | | | |

## (50)

பத்தாமிடத்தில் பிதுர்க்காரகன் ஜென்ம கர்மாதிபதியுடன் கூடியிருந்தால் தந்தை கனத்த அதிகார முள்ளவனாயும் சுகவந்தனாயு மிருப்ப னென்பர்.

## (51) (பதினோராமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| ல | சனி | | |
| | | | |
| சூ-பு செ | | | |
| | | | |

பதினொரா மிடத்தில் பிதுர்க்காரகன் தன சுக சப்தம பாககியாதிபதிகளுடன் கூடி நீச்ச சனியால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தைவர்க்கம் ஆண் மூன்று. பெண்மூன்று. பதினான்கில் தந்தை மரண மடைவனென்பர்.

## (52)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| சூ-பு கே | | | |
| | | | |

பதினொரா மிடத்தில் பிதுர்க்காரகன் புதன் கேது இவர்களுடன் கூடியிருந்தால் தந்தைக்குத் தார மிரண்டு. பூமிமூலம் ஜீவனம். தந்தை தீர்க்காயு ளுடையவனா யிருப்ப னென்பர்.

## (53)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| சூ சனி | | | |
| | செ ரா | | |

பதினொரா மிடத்தில் பிதுர்க்காரகன் லாப விரையாதிபதியுடன் கூடி பாக்கியத்தில் பிதுர்ஸ்தானாதிபதியுடன் ராகு சம்மந்தமுண்டானால் தந்தைவர்க்கம் ஆணிரண்டு தந்தை பதினெட்டில் மரணமாவ னென்பர்.

## (54)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | |
| சூ-சு வி-ரா | | | |
| | செ | | |

பதினொரா மிடத்தில் பிதுர்க்காரகனு டன் சுக்கிரன் குரு ராகு இவர் மூவர் கூடி பாக்கியத்தில் பிதுர்ஸ்தானாதிபன் ஸ்வ க்ஷேத்திரனா பெற்றிருந்தால் தந்தை வர்க்கம் ஆண்மூன்று, ஒன்பது வயதில் தந்தைக்கரிட்டமுண் டென்பர்.

## (55)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | | | குரு |
| சூ | | | |
| | | | |

பதினொரா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று பஞ்சம திரிகோணமேறிய உச்ச குருவால் பார்க்கப்பட்டிருந்தால் தந்தை பலவான். அதிகாரமும் செல்வமுமுடையவனா யிருப்ப னென்பர்.

## (56) (பனிரண்டாமிடம்.)

| | | | |
|---|---|---|---|
| ல | | செ | |
| சூ | | | |
| | | | |
| | | | |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாய் நின்று பிதுர்ஸ்தானாதிபதியான குஜன் மூன்றாமிட மேறியிருந்தால் தந்தைவர்க்கம் ஆணிரண்டு, தந்தை அதிகாரமுள்ளவனா யிருப்ப னென்பர்.

## (57)

| | | | |
|---|---|---|---|
| ல | | சனி | |
| சூ | | | |
| | | | |
| | | | சனி |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் ஏகனாயிருந்து பிதுர்ஸ்தானத்தை திருதியமேறிய லாப விரையாதிபதியால் நோக்கப்பட் டிருந்தால் ஜாதகனுக்கு பதினைந்து வயதில் பிதுர் மாதுரு மரணமாவர்களென்பர்.

## (58)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| சூ-பு | | | |
| | | | |
| | குரு | | |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் சுக சப்தமாதிபதியுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் பிரகஸ்பதியிருந்தால் ஜாதகன் வியாபார மூல மேன்மை யடைவான். தந்தை அன்னிய தேசவாசியாய் தேசங்கள் சுற்றி திரிவ னென்பர்.

## (59)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| சூ-பு குரு | | | |
| | | | |
| | கே | | |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் ஜென்ம சுக சப்தம கர்மாதிபதிகளுடன் கூடி பிதுர்ஸ்தானத்தில் கேது இருந்தால் தந்தைவர்க்க மூன்றில் தந்தை ஏகன் ஜாதகன் பிறந்த மாதத்தில் தந்தைக்குக் கர்ம மென்பர்.

## (60)

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| சூ-சு ச | | | |
| | | | |
| | | | |

பனிரண்டா மிடத்தில் பிதுர்க்காரகன் மூன்று, ஐந்து, எட்டு, இந்த வீட்டுக்குடையவர்களுடன் கூடி யிருந்தால் தந்தையுடன் ஆணிரண்டு. ஜாதகனுக்கு நாற்பதில் தந்தைக்கு மரணமெகண்ட மென்பர்.

### ஆக லக்கினம் 12க்குக் கூடிய மொத்தசக்கிரங்கள் (720)

# ஈஷ்வர நாடி சோதிடம்

## முதல் பாகம்

சூரிய காண்டம் — முற்றிற்று.